சார்பிற் றோன்று வாரண வேதக்
காதி யந்த மில்லையது நெறியெனும்
௧0௫ வேதிய னுரையின் விதியுங் கேட்டு
மெய்த்திறம் வழக்கென விளம்பு கின்ற
வெத்திறத் தினுமிசை யாதிவ ருரையென
வாசீ வகநூ லறிந்த புராணனைப்
பேசுநின் னிறையார் நூற்பொருள் யாதென
௧௧0 வெல்லையில் பொருள்களி லெங்குமெப் பொழுதும்
புல்லிக் கிடந்து புலப்படு கின்ற

---

றும், எழுத்தாராய்ச்சியாகியபிரமமும், செய்யுளிலக்கணமாகிய சந்தமுமாம், (தொல். புறத். சூ. உ0; கலி. கடவுள்) என்பர் ஆசிரியர் நச்சினார்க்கினியர்.

௧0௩. சார்பிற்றோன்று-ஒரிடத்திற் றோன்றுத; சுயம்புவென்றபடி. திருவள்ளுவமாலையில் வெள்ளிவீதியார் (௪உ) பாட்டில் வேதம், "செய்யா மொழி" என்று கூறப்பட்டிருத்தல் காண்க; இக்கருத்தை, "சாத்திக மல்லது சொல்லலை யாயின்மு னுள்பயந்த, சாத்திர மாவது வேதமன் றேவதுதான் சயம்பு, சூத்திரி நீயது வல்லை யலாமையிற் சொல்லுகிலாய், போத்தந்தியோ வதன்றீமையென் றும்பொங்கிப் பூதிகனே", "பூதிகன் றனது சொல்லலும் யானது வல்லமெல்லாஞ்,சாதிகண் டாயெனத் தானே றா ராததுசாற்றுகென் றுட்,காதியென் றுனுமொ ரர்தமென் றுமுன் டேலதற்கு,நீதியி னுவுரை நீயினி யானது சேர்வ னென்றான்" (நீல. வேத. - ) எனவருவனவற்று லுணர்க. வேதக்கு - வேதத்திற்கு.

௧0௫. வேதியன் - வேதவாதி.

௧0௬. மெய்த்திறம் - நூல்வகைகள். மெய்யுணர்த்துவனவற்றைமெய் யென்றார்; "மெய்த்திறம் வழக்கு நன் பொருள் வீடு" (௧ : ௧௧) என முன்பு வந்திருத்தல் காண்க. "யாமெய்யாக்கண் டவற்றுள்" (௩00) என்னும் திருக்குறளில், 'மெய்' என்பது இப்பொருளதாதலறிக. வழக்கு - உலகியல்.

௧0௬ - எ. இவ்வடிகளாற் கூறப்பட்டுள்ளவை மணிமேகலையின் உட்கோள்.

**ஆசீவகவாதம் :—**

௧0அ. ஆசீவகநூல் - சமணசமயத்தின் பாகுபாடு இரண்டனுள் ஒரு வகைக்குரியநூல்; "அவ்வதோர் வாய்மை யாசீ வகனம ணர்களிற் கூறும்" (சிவ. சித்தி. பரபக்கம், ஆசீவகமதம்,௧.) புராணன் -முதியோன். ஆசீவசமதம், முற்காலத்துச் சமதண்டமென்று பெயருள்ள ஒரூரிற் பரவியிருந்த தென்று தெரிகின்றது (நீல.)

௧0௯. இறை யார் - கடவுள்யாவன். நூற்பொருள் யாதென - உனது நூலிற் சொல்லப்படும் பொருள் என்னவென்று மணிமேகலை கேட்ப.

௧0௯ - ௯. "ஆத்த நூலும் பொருளு நிகழ்ச்சியும், பாத்தன சொல்லித் பயம்பெரி தாதலி,னேத்துமை யேயிங் குரையென் றுரைத்தனள்,சாத்திரம் யாவையுந் தன்னிக ரில்லாள்" நீல. ஆசீவக. ௧உ.

(பி - ம்.) ௧0௩ - ௪. 'வேதத், தாதியந்த மில்லை யதுவே நெறியெனும்'

வரம்பி லறிவ னிறைநூற் பொருள்களைந்
துரந்தரு முயிரோ டொருநால் வகையணு
வவ்வணு வுற்றுங் கண்டு முணர்ந்திடப்
ககரு பெய்வகை கூடிப் பிரிவதுஞ் செய்யு
நிலநீர் தீக்காற் றெனநால் வகையின
மலைமர முடம்பெனத் திரள்வதுஞ் செய்யும்
வெவ்வே றாகி விரிவதுஞ் செய்யு
மவ்வகை யறிவ துயிரெனப் படுமே
கஉo வற்ப மாகி யுறுநிலந் தாழ்ந்து
சொற்படு சீதந் தொடுசுவை யுடைத்தா
யிழினென நிலஞ்சேர்ந் தாழ்வது நீர்தீத்
தெறுதலு மேற்சே ரியல்பு முடைத்தாங்

---

ககஉ. வரம்பிலறிவன் இறை - அனந்தஞானியாகிய மற்கலிதேவனே எமது கடவுள். நூற்பொருள்கள் ஐந்து - நவகதிரென்னும் நூலிற் கூறப் பட்டுள்ள பொருள்கள் ஐந்தாகும்.

ககங. அப்பொருள்கள் உயிரும் நால்வகையணுக்களுமாம்.

ககஉ - ங. ஆசீவகமதத்தினர்க்குத்தெய்வம் மற்கலியென்பதும், நூல் நவகதிரென்பதும், அதிற் கூறப்பட்ட பொருள்கள் ஐந்தென்பதும் ஆகியஇவற்றை, "என்று மற்கலி தானே யிறையெனி,யொன்பது வாங்கதிர் நூல்யா முடையம், மன்பெறு நுண்பொரு ளைந்தியல் பாயவை, யின்ப நிகழ்ச்சியுங் காழ்ப்பா டெனச்சொல" (நீல. ஆசீவக. க) என்பதனாலறிந்து கொள்க. "மற்கலி நூலின் வகையிது" (க[illegible]) என்று இக்காதையி லேயே பின் வருதல் காண்க.

ககச. அவ்வணுவென்றது, உயிரை.

ககரு. கூடி - நிலவணுமுதலிய நால்வகையணுக்களோடுங் கூடி.

ககச - ரு. இவ்வடிகள் உயிரணுவின் இலக்கணங்கூறின.

ககசு. மேற்கூறிய நால்வகையணுக்களும் இவையென்றபடி.

ககஎ - அ. அந்நால்வகையணுக்களும் திரள்வதுஞ்செய்யும் விரிவதுஞ்செய்யும்.

ககஅ - அ. இவ்வடிகளால் மேற்கூறிய நால்வகையணுக்களின் பொது விலக்கணங் கூறப்பட்டது.

கஉo. வற்பம் - வன்மை. நிலம் வற்பமாகியுறும்.

கஉo - உஉ. தாழ்ந்து உடைத்தாய்ச்சேர்ந்து ஆழ்வது நீரென்க.

கஉங. தெறுதல் - சுடுதல்.

கஉஉ - ங. தீ, பெறுதலும் மேற்சேரியல்புமுடைத்து.

(பி - ம்.) ககங - ச. 'நாலவகையினு, மூவணு'

காற்று விலங்கி யசைத்தல் கடனிவை
௧௨௫ வேற்றியல் பெய்தும் விபரீ தத்தா
லாதி யில்லாப் பரமா ணுக்க
ளூதுற் றியாவதுஞ் சிதைவது செய்யா
புதிதாய்ப் பிறந்தொன் றொன்றிற் புகுதா
முதுநீ ரணுநில வணுவாய்த் திரியா
௧௩0 வொன்றிரண் டாகிப் பிளப்பதுஞ் செய்யா
வன்றியு மவல்போற் பரப்பதுஞ் செய்யா
வுலாவுந் தாழு முயர்வதுஞ் செய்யுங்
குலாமலை பிறவாக் கூடும் பலவும்
பின்னையும் பிரிந்துதந் தன்மைய வாகு
௧௩௫ மன்னிய வயிரமாய்ச் செறிந்துவற் பமுமாம்
வேயாய்த் துளைபடும் பொருளா முளைக்குந்
தேயா மதிபோற் செழுநில வரைப்பா
நிறைந்தவிவ் வணுக்கள் பூதமாய் நிகழிற்
குறைந்து மொத்துங் கூடா வரிசையி

---

௧௨௪. விலங்கி - குறுக்கிட்டு. இவை - இவ்வணுக்கள்.

௧௧௩ - ௨௪. இவ்வடிகளாற் கூறப்பட்டுள்ள ஐந்துபொருள்களினியல்பைப் பின்வருஞ்செய்யுட்களாலுமறிக; "நிலநீ ரெரிகாற் றுயிரின் னியல்பும், பலநீ ரவற்றின் படுபா லவைதாம், புலமா கொலியொன் றொழிய முதற்காஞ், சலமா யதுதன் மையைய முதலாம்", "மறித்தல் முதலா யினநீ யினவாஞ், செறித்தல் லொலியோ டிவைகாற் றிறமா, மறித்தல் லறிதல் லவைதா முயிராக், குறித்த பொருளிற் குணமா மிவையே." நீல. ஆசீவக. ௧எ, ௧௮.

௧௨௫. வேற்றியல்பு - வேறுதன்மை.

௧௨௭. யாவதும் - சிறிதும். சிதைவது - அழிதல்.

௧௩௧. அவல்போல்-அவலைப்போல். ௧௩௫. வற்பம் - வன்மை.

௧௩௬. வேய் - மூங்கில். ௧௩எ. தேயாமதி - முழுமதி.

௧௩௯. குறைந்தும் ஒத்தும் கூடா - பின் சொல்லப்படுமளவிற் குறைந்தும் அளவொத்துங் கூடுவனவல்ல.

௧௩௯ - ௪௧. "ஒன்றினை யொருவி மூன்றங் குற்றிடா விரண்டு விட்டு, நின்றிடா திரண்டு கூடு நெறியில நான்கு நீர்மூன், றின்றிரண் டுழல்கா லொன்று மிசைந்திடும் பூமி யிவ்வா, றென் றுரைத் தீகா ணாகி வீண்டுவ தென்றி யம்பும்" (சிவ - சித்தி. பரபக்கம், ஆசீவகமதம், எ) எனவருதல்காண்க.

(பி - ம்.) ௧௨௪. 'காற்றுவிலங்கே யசைத்தல்கடனவை' ௧௨௫. 'வேற்றிய லெய்தும்' ௧௨எ. 'யாதுஞ்சிதைவது' ௧௨௮. 'புத்தாய்ப்பிறந்தொன்று' ௧௨௯. 'பிறவாய்க்கூடுமலையும்' ௧௩௪-௫. 'தன்மையதாக, மன்னிய' ௧௩௬. 'வேயாய்த் துளைப்படும்' ௧௩எ. 'வரைப்பால்' ௧௩௯. 'கூடாவரியின்'

கச0 ஞென்று முக்கா லரைகா லாயுறுந்
துன்றுமிக் கதனாற் பெயர்சொலப் படுமே
யிக்குணத் தடைந்தா லல்லது நிலனாய்ச்
சிக்கென் பதுவு நீரா யிழிவதுந்
தீயாய்ச் சுடுவதுங் காற்றாய் வீசலு
கசரு மாய தொழிலை யடைந்திட மாட்டா
வோரணுத் தெய்வக் கண்ணோ ருணர்குவர்
தேரார் பூதத் திரட்சியு ளேனோர்
மாலைப் போதி லொருமயி ரறியார்
சாலத் திரண்மயிர் தோற்றுதல் சாலுங்
கரு0 கரும்பிறப் புங் கருநீலப் பிறப்பும்
பசும்பிறப் பும் செம்பிறப் பும்
பொன்பிறப் பும் வெண்பிறப் பு
மென்றிவ் வாறு பிறப்பினு மேவிப்
பண்புறு வரிசையிற் பாற்பட்டுப் பிறந்தோர்
கருரு கழிவெண் பிறப்பிற் கலந்துவீ டணைகுவ

---

கசங. சிக்கென் பதுவும் - வன்மையுற்றிருத்தலும்; 'வற்ப மாகி யுறு நிலம்' (கஉ0) என்று இக்காதையில் முன்பு வந்திருத்தல்காண்க.

கசசு. தெய்வக்கண்ணோர் - கேவலஞானிகள்.

கசஎ. தேரார் - அறியார். ஏனோர் - மற்றையோர்; என்றது, கேவல ஞானிகளல்லாதாரை.

கசசு - எ. ஓரணுவை ஏனோர் தேராரென்க. கசஅ. போது - காலம்.

கசகூ. சாலும் - மேற்கூறியதற்கு உவமையாகவமையும்.

கரு0. கரும்பிறப்பென்றது, நரகசன்மத்தை.

கருரு. கழிவெண்பிறப்பு - மிகவெள்ளியபிறப்பு.

கரு0 - ரு. இவ்வடிகளிற் கூறிய கரும்பிறப்புமுதலியவைகள் முறையே ஒன்றற்கொன்று ஏற்றமுடையவை; "வெண்மைமன் பொன்மை செம்மை நீல்கழி வெண்மை பச்சை, யுன்மையின் வாறி [illegible]ன்றுங் கழிவெண்மை யோங்கு வீட்டின், வண்மைய தாகச் சேரு மற்றிவை யுருவம் பற்றி, யுண்மையல் வொட்டுத் தீட்டுக் கலப்பிலி [illegible]ணரு மென்றும்" (சிவ - சித்தி. பரபக்கம், ஆசீவகன்மதம், அ.) [illegible] பிறப்புக்களை வகுத்துக் கூறியதுபோல,

(பி - ம்.) கச0. 'அரைக்காலாயுங்' கசக. 'மிக்கவதனிற்' கசங. 'சிக்கென்பதுவுநீராயிழிவதுங்' கசச. 'தீயாச்சுடுவதுங் காற்றாய் வீசுவதும்' கசரு - சு. 'மாட்டாதோரணு' கசஎ. 'சோராபூதத்திரட்சியுளானோர்' கசஅ. 'மயிருமறியார்' கருச - ரு. 'பாற்படக் கழிந்த, கழிவெண்பிறப்பிற் கலந்து வீடணைவர்'

ரழியல் வேண்டா ரதுவுறற் பாலா
ரிதுசெம் போக்கி னியல்பிது தப்பு
மதுமண் டலமென் றறியல் வேண்டும்
பெறுதலு மிழத்தலு மிடையூ றுறுதலு
கசுo முறுமிடத் தெய்தலுந் துக்கசுக முறுதலும்
பெரிதவை நீங்கலும் பிறத்தலுஞ் சாதலுங்
கருவிற் பட்ட பொழுதே கலக்கு
மின்பமுந் துன்பமு மிவையுமணு வெனத்தகு
முன்னுள வூழே பின்னுமுறு விப்பது
கசுரு மற்கலி நூலின் வகையிது வென்னச்
சொற்றடு மாற்றத் தொடர்ச்சியை விட்டு

---

"மணியுயிர் பொன்னுயிர் மாண்ட வெள்ளியி, னணியுயிர் செம்புயி ரிரும்பு போலவாம், பிணியுயி ரிறுதியாப் பேசி னேனினித், துணிமின மெனத் தொழு திறைஞ்சி வாழ்த்தினார்" (சீவக. ஙகககக) என்று உயிர்களை வகுத்துக் கூறியிருத்தல் காண்க.

கருசு. 'அது' என்றது, கழிவெண்பிறப்பினை.

கருஎ. 'இது' என்றது, கரும்பிறப்புமுதல் கழிவெண்பிறப்பு இறுதியாகவுள்ள பிறப்புக்களில் முறையே பிறந்து வீடுபெறுதலை.

கருஅ - கசுஉ. பெறுதன்முதற்சாதலீறாகவுள்ளவைகள் கருவிற் சேர்ந்த பொழுதே கலப்பனவாம்.

கசுங. இன்பதுன்பங்களாகிய இவைகளும் அணுவென்று கூறப்படும்.

கருகூ - கசுச. இவ்வடிகளின் பொருளோடு, "பேறிழ விடையூ றின்பம் பிரிவிலா திருக்கை யற்றம், வேறொரு நாட்டிற் சேறல் விளைந்திடு மூப்புச் சாதல், கூறிய வெட்டு முன்னே கருவினுட் கொண்ட தாகுந், தேறிய வூழிற் பட்டுச் செல்வதிவ் வுலக மென்றான்", "புண்ணிய பாவமென்னு மிரண்டனுப் பொருந்த வைத்தே, யெண்ணிய விவற்றினோடு மேமெழ வெங்கனோடு, நண்ணிய வொருவன் கூறு ஞானமிவ் வாறதென்று, கண்ணிய கருத்தினோர்கள் கதியினைக் காண்ப ரென்றான்" (சிவ - சித்தி. பரபக்கம், ஆசீவகன்மதம், கூ - கo) என்னும் செய்யுட்களை ஒப்பிடுக.

கசுரு. மற்கலிதேவனது ஒன்பதுகதிரென்னும் நூலிற் கூறப்பட்டுள்ள வகை இதுவாகுமென்று ஆசீவகமதத்தோன் சொல்ல.

கசுசு. சொற்றடுமாற்றத்தொடர்ச்சி - தடுமாற்றச் சொற்றொடர்ச்சி; என்றது, பூர்வோத்தரவிரோதமுள்ள ஆசீவகமதத்தோன் கூற்றை.

(பி - ம்.) கருஎ. 'அழியியல்வேண்டா வதுவுறற்பாலர்' கருஅ. 'வேண்டுதலும்' கருகூ. 'இறத்தலும்' கசுo. 'உடமிறுத்தெய்தலுந் துக்கமுஞ் சுகமிறுறலும்' கசுஉ. 'பொழுதேபிறக்கு' 'பொழுதேயிறக்கும்' கசுங. 'இவையிவையெனத்தகு' கசுரு. 'மறக்கலின்னூலின் வகையிது வென்று' கசுசு. 'சொற்றமாற்றத்'

நிகண்ட வாதியை நீயுரை நின்னாற்
புகழுந் தலைவன் யார் நூற்பொருள் யாவை
யப்பொரு ணிகழ்வுங் கட்டும் வீடு
கள0 மெய்ப்பட விளம்பென விளம்ப லுறுவோ
னிந்திரர் தொழப்படு மிறைவனெம் மிறைவன்
றந்த நூற்பொரு டன்மாத்தி காயமு
மதன்மாத்தி காயமுங் காலா காயமுந்
தீதில் சீவனும் பரமா ணுக்களு
களரு நல்வினை யுந்தீ வினையுமவ் வினையாற்
செய்வுறு பந்தமும் வீடுமித் திறத்த
வான்ற பொருடன் றன்மைய தாயுந்
தோன்றுசார் வொன்றின் றன்மைய தாயு

---

கள0. மெய்ப்பட - உண்மைப்பட.

ககூஎ - எ0. நிகண்டவாதியை நோக்கி உங்கள் தலைவன்யார்? நூற் பொருள்கள் யாவை? அப்பொருள்களின் நிகழ்ச்சியையும், பந்தத்தையும், வீட்டினையும், சொல்லுவாயென்று மணிமேகலை கேட்ப. நிகண்டவாதி - சமணர் இருதிறத்தாரில் ஒருவகையார்; இவர் நிர்க்கந்தவாதியென்றும் திகம்பரவாதியென்றுங் கூறப்படுவர்; இறைவன், நூல், பொருள், பொருணிகழ்வு என்னுமிந்நான்கினையும் முறையே ஆப்தர், ஆகமம், பதார்த்தம், பிரவர்த்தியென்பர்.

நிகண்டவாதம்:—

களக. சதேந்திரர்களாலே வணங்கப்படும் அருகனே எமது ஸ்வாமி; சதேந்திரராவார்:— பவணேந்திரர் நாற்பதின்மரும், வியந்தரேந்திரர் முப்பதின்மரும், கற்பேந்திரர் இருபதின்மரும், சக்கிரவர்த்தியும் சூரியனும் சந்திரனும் மிருகேந்திரனுமென்பார்.

களஉ. தந்தநூற்பொருள் - (அருகன்) உண்டுபண்ணிய அங்காகமம் பூர்வாகமம் பகுசுருதியாகமமென்னுமூன்று ஆகமங்களிலும் கூறப்பட்டுள்ள பொருள்கள்.

களங. காலமும் ஆகாசமும்.

களஉ - சு. தந்தநூற்பொருள்கள் தருமாத்திகாயம் முதல் வீடு இறுதியாகவுள்ள இந்தப் பத்துப் பகுதியின.

களக - சு. இவ்வடிகளாற் கூறப்பட்டுள்ள இறைவனையும் அவன்கூறிய நூற்பொருள்கள்பத்தையும், "எனக்கேட்டாங் கெடுத்துரைப்பா னிந்திரர்க டொழப்படுவான், றனக்காய தருமமு மதருமமுங் காலமு, மனப்பாட்டாகாய முயிரினும் புண்ணியமும், வினைக்குக்காற் பாவமே கட்டுவீடெனிறுத்தான்" (நீல. மொக்கல. உஉ) என்னும் செய்யுளாலுமறிந்துகொள்க.

(பி - ம்.) ககசு. 'புகழ்ந்த தலைவன்'

மநித்தமு நித்தமு மாகி நின்று
௧௮௦ நுனித்த குணத்தோர் கணத்தின் கண்ணே
தோற்றமு நிலையுங் கேடு மென்னு
மாற்றரு மூன்று மாக்கலு முரித்தா
நிம்ப முளைத்து நிகழ்த னித்திய
நிம்பத் தப்பொரு ளன்மை யநித்தியம்
௧௮௫ பயற்றுத் தன்மை கெடாதுகும் மாய
மியற்றி யப்பய றழிதலு மேதுத்
தருமாத்தி காயந் தானெங்கு முளதாய்ப்
பொருள்களை நடத்தும் பொருந்த நித்தியமா

௧௭௯ - ௮௦. ஒருபொருள் ஒரேகணத்தில் அநித்தியத்தன்மை நித்தியத்தன்மையென்னும் இரண்டையுமடையுமென்பதை, "கல்வியா னல்லனோ காமாதியாற் றீயன், செல்வத் துயர்ந்தான் குலத்தினிற் றாழ்ந்தனனும், வல்லுவா னென்னென்றும் வல்லா னிதுவன்றே, நில்லாமை நித்த நிலை" (நீல. மொக்கல. ௪௧௩ - சமய) என்பதனாலுமுணர்க. கணம் - க்ஷணம்.

௧௮௦ - ௮௨. ஒருபொருள் ஒருகணத்தில் உற்பத்தி ஸ்திதி நாசமென்னு மூன்றையுமடையுமென்பதை, "உருவப் பிழம்பப் பொருளென்றுரைப்பனிப் பாறயிர்மோர், பருவத்தி னும்பரி யாயப் பெயரென்பன் பாலழிந்து, தருவித் துரைத்த தயிருரு வாய்மும்மைத் தன்மையதாம், திருவத்த தென்பொரு ளாதலைத் தேர் தெளியிதென்றான்" (நீல. மொக்கல. ௧௨௨) என்னுஞ்செய்யுளாலும், 'உருவப்பிழம்பாகியபுற்கலத்தைப்பொருளென்பேன்; பாலதயிர் முதலாயின அதனது பரியாயமென்பேன்; பாற்பரியாயத்து நின்ற புற்கல 'திரவ்யம் தயிர்ப் பரியாயமடைந்து பரிணமித்தலில் உற்பத்தி ஸ்திதி விநாசாத்மகமாகித் தூஷிக்கப்படாத பெருமைத்தாம் என்பொருளென்று தெளியென்று சொன்னான்' என்னும் அதனுரையாலு மறிந்துகொள்க.

௧௮௧ - ௮௨. பொருள் உரித்தாமென்க. ௧௮௩. நிம்பம் - வேம்பு.

௧௮௫ - ௬. இவ்வடிகளாற் கூறப்பட்டுள்ள திருஷ்டாந்தத்தினியல்பை, "பெற்றது தானுங்கும் மாயத் திரிபு பயற் றியல்பே, யிற்ற திதுவென விட்டமென் பாயின் விருமையினுந், தெற்றெனத் தீர்ந்தோர் பொருளென்னை தேற்றினித் தேற்றலையேன், மற்றது வாமை மயிரெனச் சொல்லுவன் மன்னுமென்றான்" (நீல. மொக்கல. ௧௨௩) என்பதனாலுமுணர்க. கும்மாயம் - புழுக்கிய பச்சைப் பயற்றோடு சருக்கரை முதலியன கூட்டி ஆக்கப்படுவதொரு சிற்றுண்டி; இஃது இப்பெயரோடு விஷ்ணுவாலயங்களில் இக்காலத்தும் [illegible]; "கும்மாயத்தொடு வெண்ணெய்விழுங்கி" (திவ். பெரியாழ்வார். ௩. ௩ : ௩) என்பதில் 'கும்மாயம்' என்பதற்கு ஸ்ரீ மணவாளமாமுனிகள் 'குழையச்சமைத்தபருப்பு' என்று பொருள்செய்திருக்கின்றனர். 'பயற்றது கும்மாயம்' நன். சூ. ௨௬௪ - மயிலை. மேற்.

௧௮௭ - ௯. தருமாத்திகாயம் எங்குமுளதாகி எக்காலத்தும் பொருள்களை நடத்துமென்க.

வப்படித் தாகி யதன்மாத் திகாயமு
ககூ0 மெப்பொருள் களையு நிறுத்த லியற்றுங்
காலங் கணிக மெனுங்குறு நிகழ்ச்சியு
மேலுங் கற்பத் தின்னெடு நிகழ்ச்சியு
மாக்குமா காய மெல்லாப் பொருட்கும்
பூக்கு மிடங்கொடுக்கும் புரிவிற் ருகுஞ்
ககூடு சீவ னுடம்போ டொத்துக் கூடித்
தாவில்சுவை முதலிய புலன்களை நுகரு
மோரணு புற்கலம் புறவுரு வாகுஞ்

---

கஅகூ - கூ0. அதன்மாத்திகாயம் எப்பொருள்களையும் நிற்கச்செய்யும.

கஅஎ - கூ0. இவ்வடிகளாற் கூறப்பட்டுள்ள தருமாஸ்திகாயம் அதருமாஸ்திகாயங்களினிலக்கணங்களைப் பின்வருபவைகள் நன்கு புலப்படுத்தும்:—“அத்தியா யமூர்த்தியா யாவி றேசியா, பொத்தன புலகிறேறு டுலக லோகமாந், தத்துவந் தனைச்செய்து தம்மத் தம்மமா, மத்திகள் செலவொடு நிலையிற் கேதுவாம்”, “அச்சுநீர் தேரொடு மீனை யீர்த்திடா, வச்சுநீ ரன்றியத் தேரு மீன்செலா, வச்சுநீர் போலத்தம் மத்தி சேறலை, யிச்சையு முயற்சியு மின்றி யாக்குமே”, “அந்தரத் தருபத்து மூன்ற தாகிய, விந்திர படலமு நிரைய மேழ்களு, மந்தர மலைமண்ணு மற்று நின்றிடா,வந்தமி னிலையதம் மத்தி யில்லையேல்”, “பறவையின் சிறகொடு பாத நின்றுழி, நெறியினுற் செலவொடு நிலையை யாக்குமா, லுறவிபுற் கலமிவை யோடனிற்றலைச், செறிவுறத் தம்மத்தம் மத்தி செய்யுமே” (மேருமந்தா. வைசயந்தன்முத்தி. அஎ, கூ0, கூக, கூஉ); ‘தருமாத்திகாயம், குயவன் திகிரிக்குக் கீழ்ட்டசிலைபோலவும், தேருக்கு அச்சுப்போலவும், கலத்திற்குக் கடல்போலவுமாம்’,‘தருமாத்தியும் அதருமாத்தியும் பக்ஷிக்குச் சிறகுங் காலும்போற் சீவபுற்கலங்களுடைய கமனத்திற்கும் ஸ்திதிக்கும் அப்பிரேரகசாதனமாம்’ நீல. மொக்கல. உஎ, உஅ - சமய.

ககூக. கணிகம் - க்ஷணிகம்.

கூக - ங. காலம் குறுநிகழ்ச்சியையும் நெடுநிகழ்ச்சியையுமாக்குமென்க; ‘க்ஷணிகமென்பது செழுசெங்கழுநீரிதழை ஒருகுறட்டிலடுக்கிப் பலவானுயினுளொருவன் மிகவுங் கூரியதோருளிவைத்துக் கூடயிட்டுப் புடைத்தால் ஆறும்புரையற்று ஏழாம்புரையிற் செல்லுமளவாம்;இனிக்கற்பமாவது, ஓசனையகன்றுயர்ந்ததோர் உச்சிமலை கருப்பிலியுடுத்த பட்டாடைத் தோகை பட்டுக் கையறத்தேய்ந்ததாம்’ நீல. மொக்கல. ஙக - சமய.

கூங - ச. ஆகாயம் எல்லாப்பொருட்கும் இடங்கொடுக்குஞ் செயலையுடையது; “பரந்திடங் கொடுக்கும் விசும்புநீதா யுள்ளம்” மலைபடு. ௪௮.

ககூடு - கூ. சீவன் உடம்போடொத்துக்கூடிப் புலன்களை நுகரும்.

ககூஎ. ஓரணு - பரமாணு; அவ்வணு புற்கலமும் புறவுருவுமாகும். புற்கலமென்றது, உடம்பை; புறவுருவென்றது, மற்றைவடிவங்களை.

(பி - ம்.) ககூடு. ‘ஒத்துத்தோன்றி’

சீர்சா னல்வினை தீவினை யவைசெயும்
வருவழி யிரண்டையு மாற்றி முன்செ
௨௦௦ யருவினைப் பயனனு பவித்தறுத் திடுத
லதுவீ டாகு மென்றன னவன்பி
னிதுசாங் கியமத மென்றெடுத் துரைப்போன்
றணையறி வரிதாய்த் தான்முக் குணமாய்
மனநிகழ் வின்றி மாண்பமை பொதுவா
௨௦௫ யெல்லாப் பொருளுந் தோன்றுதற் கிடமெனச்
சொல்லுதன் மூலப் பகுதிசித் தத்து
மானென் றுரைத்த புத்தி வெளிப்பட்
டதன்கணா காயம் வெளிப்பட் டதன்கண்
வாயு வெளிப்பட் டதன்க ணங்கி
௨௧௦ யானது வெளிப்பட் டதன்க ணப்பின்
றன்மை வெளிப்பட் டதின்மண் வெளிப்பட்
டவற்றின் கூட்டத் தின்மனம் வெளிப்பட்
டார்ப்புறு மனத்தாங் கார விகாரமு
மாகா யத்திற் செவியொலி விகாரமும்

---

௧௯௮. நல்வினை நல்வினையையும், தீவினை தீவினையையுமுண்டாக்கும்; இன்பதுன்பங்களையுண்டாக்குமெனினும் பொருந்தும்.

பந்தத்தினிலக்கணங்கூறிற்றிலர், "அவ்வினையாற், செய்வுறு பந்தமும்" (௭௫ - ௯) என்று முன்னர்க்கூறினமையின்.

௧௯௯. வருவழியிரண்டு - நல்வினைவரும்வழியும் தீவினைவரும்வழியும். முன்செய் - முற்பிறப்பிற்செய்த.

௨௦௧. என்றனன் - என்று நிகண்டவாதி கூறினன்.

௧௯௮ - ௨௦௧. வீட்டிலக்கணம் இவ்வடிகளாற் கூறப்பட்டதுபோல, "பெரும்பாவ மறத்துய்த்துப் பெறுதும்யாம் வீடென்றே,மரும்பாவ காரிநீ யாவர்வா யதுகேட்டாய், வரும்பாவ மெதிர்காத்து மன்னுந்தம் பழவினையு, மொருங்காக வுதிர்த்தக்கா லுயிர்த்தூய்மை வீடென்றாள்" (நீல. மொக்கல. ௭௭) என்னும் செய்யுளில் வந்திருத்தல்காண்க.

**சாங்கியவாதம் :—**

௨௦௬. சொல்லுதல் மூலப்பகுதி - சொல்லப்படுவது மூலப்பகுதி. சித்தம் - மூலப்பகுதி.

௨௦௭. மான் - மகத்தத்துவம். மகத்தத்துவத்திற்குப் புத்தியென்றும் ஒருபெயருண்டு.

௨௦௯. அங்கி - அக்கினி. ௨௧௦. அப்பு - நீர்.

௨௧௨. கூட்டம் - ஸமஷ்டி.

உ௧௫ வாயுவிற் றொக்கு மூறெனும் விகாரமு
மங்கியிற் கண்ணு மொளியுமாம் விகாரமுந்
தங்கிய வப்பில்வாய் சுவையெனும் விகாரமு
நிலக்கண் மூக்கு நாற்ற விகாரமுஞ்
சொலப்பட் டிவற்றிற் றொக்கு விகாரமாய்
உ௨௦ வாக்குப்பாணி பாத பாயு ருபத்தமென
வாக்கிய விவைவெளிப் பட்டிங் கறைந்த
பூத விகாரத் தான்மலை மரமுத
லோதிய வெளிப்பட் டுலகாய் நிகழ்ந்து
வந்த வழியே யிவைசென் றடங்கி
உ௨௫ யந்தமில் பிரளய மாயிறு மளவு
மொன்று மெங்கும் பரந்துநித் தியமா
மறிதற் கெளிதாய் முக்குண மன்றிப்
பொறியுணர் விக்கும் பொதுவு மன்றி
யெப்பொரு ளுந்தோன் றுதற்கிட மன்றி
உ௩௦ யப்பொரு ளெல்லா மறிந்திடற் குணர்வா
யொன்று மெங்கும் பரந்துநித் தியமாய்
நின்றுள வுணர்வாய் நிகழ்தரும் புருடன்
புலமார் பொருள்க ளிருபத் தைந்துள
நிலநீர் தீவளி யாகா யம்மே
உ௩௫ மெய்வாய் கண்மூக் குச்செவி தாமே
யுறுசுவை யொளியூ றோசைநாற் றம்மே
வாக்குப்பாத பாணி பாயு ருபத்த

---

உ௧௫. தொக்கு - துவக்கிந்திரியம். ஊறு - பரிசம்.

உ௧அ. நிலக்கண் - நிலத்தின்கண்.

உ௨௧. இவையென்றது, கருமேந்திரிய பஞ்சகத்தை.

உ௨௩. ஓதிய, வினையாலணையும்பெயர்.

உ௨எ - உ௩உ. இவ்வடிகளாற் புருஷ தத்துவத்தினிலக்கணங் கூறப் பட்டது; இதனை, "எத்திறத் திறஞ்செய் யாக்குண மொன்றின்றித், தத்துவ னின்பி னபேதனலேபக, னித்திய னெங்கு முளனெடுங் காட்சி யன், ஐய்த்த வுடையனென் றோன்றவு மென்றனர்" (நீல. சாங்கிய. ௭) என்பதனானுமறிந்துகொள்க.

(பி - ம்.) உ௨எ. 'முக்குணமின்றி' உ௨அ. 'பொருளுமின்றி'

மாக்கு மனேபுத்தி யாங்கார சித்த
முயிரொனு மான்மா வொன்றொடு மாமெனச்
உசO செயிரறச் செப்பிய திறமுங் கேட்டு
வைசே டிகனின் வழக்குரை யென்னப்
பொய்தீர் பொருளுங் குணமுங் கருமமுஞ்
சாமா னியமும் விசேடமுங் கூட்டமு
மாமாறு கூறு மதிற்பொரு ளென்பது
உசரு குணமுந் தொழிலு முடைத்தா யெத்தொகைப்
பொருளுக்கு மேதுவா மப்பொரு ளொன்பான்
ஞாலநீர் தீவளி யாகா யந்திசை
கால மான்மா மனமிவற் றுண்ணில
மொலியூறு நிறஞ்சுவை நாற்றமொ டைந்தும்
உருO பயில்குண முடைத்து நின்ற நான்குஞ்
சுவைமுத லொரோகுண மவைகுறை வுடைய

---

உ௩அ. புத்தி - மகத்தத்துவம். சித்தம் - பிரகிருதி.

உ௩அ - ௯. இவ்வடிகளால் இருபத்தைந்து தத்துவங்களுங் கூறப்பட்டன; இதனை, "மண்ணுயிர் தெற்றெனவில்லது மான்செருக், கென்னவு மிந்திய மைந்தைந் தொருமன,மன்னிய தன் மாத்திரை யைந்தைந்து பூதமும், பன்னிய வையைம் பதப்பொரு ளென்றான்" (நீல. சாங்கிய.௬) என்பதனாலு முணர்க; தெற்றெனவில்லது - பிரகிருதி. செருக்கு - அகங்காரம்.

உசO. கேட்டு - மணிமேகலை கேட்டு.

உசக. உரையென்ன - சொல்வாயென்று மணிமேகலைகேட்ப.

வைசேடிகவாதம்:—

உசரு. சாமானியம் - பொதுமை. விசேடம் - சிறப்பு. கூட்டம் - சமவாயம்; இதனை உடன்புணர்ப்பென்றுங் கூறுவர்.

உசச. ஆறுகூறும் - ஆறுபகுதியாகும்.

உசசு. அப்பொருள் ஒன்பான் - அந்தப்பொருள் ஒன்பது வகைப்படும்.

உசச - கூ. பொருளென்பது உடைத்தாய் ஏதுவாகும்.

உருO. நின்றநான்கு - நீர் தீ காற்று ஆகாயமென்பன.

உருக. சத்தமுதல் நாற்றமிறுதியாகிய ஐந்தனுள், நீர் சத்தமுதலிய நான்கு குணங்களையும், தீ சத்தமுதலிய மூன்றினையும், காற்றுச் சத்தமுதலிய இரண்டினையும், ஆகாயம் சத்தமொன்றினையு முடையன.

திசைமுதலிய நான்கினிலக்கணங்களும் ஒரு பிரதியிலும் காணப்படவில்லை; பின் வருவனவற்றுள்ளும் சில இப்படியே யுள்ளன.

வோசை யூறு நிறநாற் றஞ்சுவை
மாசில் பெருமை சிறுமை வன்மை
மென்மை சீர்மை நொய்ம்மை வடிவ
௨௫௫ மென்னு நீர்மை பக்கமு மனேகங்
கண்ணிய பொருளின் குணங்க ளாகும்
பொருளுங் குணமுங் கரும மியற்றற்
குரிய வுண்மை தருமுதற் பொதுத்தான்
போதலு நிற்றலும் பொதுக்குண மாதலிற்
௨௬௦ சாதலு நிகழ்தலு மப்பொருட் டன்மை
யொன்றணு கூட்டங் குணமுங் குணியுமென்
றொன்றிய வாதியு முரைத்தன னுடனே
பூத வாதியைப் புகனீ யென்னத்
தாதகிப் பூவுங் கட்டியு மிட்டு
௨௬௫ மற்றுங் கூட்ட மதுக்களி பிறந்தாங்

---

௨௫௨ - ௬. இவ்வடிகளாற் குணங்கள் பகுத்துக் கூறப்பட்டன.

௨௫௭ - ௮. பொருளும் குணமும் கருமத்தைச் செய்தற்கு உரிமையை யுடையன; பொருள் குணமென்னுமிரண்டாலும் நிகழ்வது கருமமென்றபடி. உண்மை - ஸத்துவம். முதற்பொது - பரசாமானியம். முதற்பொது உண்மை தருமென்க.

௨௬௧. ஒன்று - விசேடம்; அணு - பிருதுவிமுதலிய நான்கு பூதங்களின் பரமாணுக்கள்; ஒன்று அணுவிலுள்ளதென்க. கூட்டம் - ஸமவாயம். இவ்வடி, விசேடத்தினிலக்கணமும், ஸமவாயத்தினிலக்கணமுங் கூறிற்று.

௨௬௨. ஒன்றியவாதி - விசேடவாதி.

௨௪௨ - ௬௨. இவ்வடிகளாற் கூறப்பட்டுள்ளபொருள்களாறினியல்பை, "நெறியெனப் படுவது நின்ற மெய்ம்மையஞ், சறிதற் கரியன வாறு சொற்பொருள், செறியயாஞ் சொல்லிற்றப்பியங் குணந்தொழில்,பொதுச் சிறப் புடம்பு ணர்ப்பதே", "பூதமைந் தொடுதிசை மனம்பொழு துயிர்,போதினப் பொருள்களா மொன்ப தாமவை,சீதியிற் குணமவற் றியல்பு செய்கையும், போதரும் பொருட்புடை பெயர்ச்சி யாகுமே", "பெரியதும் பின்னது மாய தப்பொது,வுரிதினிற் பொருள்களைச் செறுத்த மொற்றுமை, தெரிவுற வருவது சிறப்ப தாங்குணக், கிரியைக ளிதற்மெனக் கிளத்தல் கூட்டமே" (நீல. வைசேடிக. ௩, ௪, ௫) என்பவற்றுஞ்செய்யுட்களாலுமுணர்க.

௨௬௩. புகல் நீ என்ன - நீ சொல்வாயென்று மணிமேகலை சொல்ல.

பூதவாதம்:—

௨௬௪. தாதகிப்பூ - ஆத்திப்பூ. கட்டி - கருப்புக்கட்டி.

௨௬௫. மற்றுங்கூட்ட - கூட்டற்குரிய மற்றைப் பொருள்களையுங் கூட்ட. மதுக்களி பிறந்தாங்கு - மதுவினிடத்துள்ள மதசக்தி தோன்றினாற் போல.

குற்றிடும் பூதத் துணர்வு தோன்றிடு
மவ்வுணர் வவ்வப் பூதத் தழிவுகளின்
வெவ்வேறு பிரியும் பறையோ சையிற்கெடு
முயிரொடுங் கூட்டிய வுணர்வுடைப் பூதமு
௨௭௦ முயிரில் லாத வுணர்வில் பூதமு
மவ்வப் பூத வழியவை பிறக்கு
மெய்வகை யிதுவே வேறுரை விகற்பமு
முண்மைப் பொருளுமுலோ காயத னுணர்வே
கண்கூ டல்லது கருத்தள வழியு
௨௭௫ மிம்மையு மிம்மைப் பயனுமிப் பிறப்பே
பொய்ம்மை மறுமையுண் டாய்வினை துய்த்த

---

௨௬௬. பிருதுவி முதலிய ஐந்து தத்துவங்களின் சமவாயத்தில் அறிவு உதிக்கும்; பூதங்களைந்துமுண்டென்பது பூதவாதியின் கொள்கை. நிலம், நீர், தீ, வளியெனப்பூதம் நான்கேயென்பது உலோகாயதன்கொள்கை.

௨௬௮. பறை - பேரிகை. ஓசையின் - ஓசையைப்போல.

௨௬௬ - ௮. 'மாமுதலாகிய ஐந்து திரவியத்தின் கூட்டத்தில் மதசக்தி பிறந்தாற்போலப் பிருதுவியாதி பஞ்சபூதசமவாயத்து ஞான சுகாதி தோன்றி அவை வளர வளர்ந்து அந்தப் பூதங்கள் பிரிந்தால் அவை தம்மினமாகிய பூதங்களிற் சென்று சேரும்' நீல. பூத. ௫ - சமய.

௨௭௨. வேறு உரைவிகற்பமும் - யான் கூறும் வேறுள்ள சொல்விகற்பங்களும்.

௨௭௩. உண்மைப்பொருளும் - தத்துவங்களும். உலோகாயதனுணர்வே - உலோகாயதனுணர்ந்தவைகளே; உலோகாயதன் கொள்கையினை, சிவஞான சித்தியார் பரபக்கத்துள்ள உலோகாயதன் மதத்தாலும், 'காட்சியே அளவை யாவதென்றும், நிலம் நீர் தீ வளியெனப் பூதம்நான்கேயென்றும், அவற்றது புணர்ச்சிவிசேடத்தாற்றோன்றிப் பிரிவான் மாய்வதாய உடம்பின்கண்ணே அறிவு மதுவின்கட் களிப்புப்போல வெளிப்பட்டழியுமென்றும், இறந்தவுயிர் பின்பிறவாதென்றும், இன்பமும் பொருளும்ஒருவனாற் செய்யப்படுவனவென்றுஞ் சொல்லும் உலோகாயதம்' (குறள். ௨௪௧) என்று பரிமேலழகரெழுதியவாற்றாலுமுணர்க.

௨௭௨ - ௩. உலோகாயதன் கொள்கைகளுள் பூதநான்கேயென்பதொழிந்தவைகள் தன்கொள்கையோடொக்குமாதலின், 'வேறுரை விகற்பமும் உண்மைப்பொருளு முலோகாயதனுணர்வே' என்றான்.

௨௭௪. கண்கூடு - பிரத்தியக்கப்பிரமாணம்; கருத்தளவு - அனுமானப்பிரமாணம்.

௨௭௫. இப்பிறப்பே - இப்பிறப்பிலேதானே கழிவன; ஈண்டு, 'கழிவன' என்று ஒருசொல்வருவிக்க.

௨௭௬. துய்த்தல் - அனுபவித்தல்; துய்த்தல் பொய்ம்மை.

லென்றலு மெல்லா மார்க்கமுங் கேட்டு
நன்றல வாயினு நான்மா றுரைக்கிலேன்
பிறந்தமுற் பிறப்பை யெய்தப் பெறுதலி
உஅ0 னறிந்தோ ருண்டோ வென்றுநக் கிடுதலுந்
தெய்வ மயக்கினுங் கனவுறு திறத்தினு
மைய லுறுவார் மனம்வே றாம்வகை
யைய மன்றி யில்லையென் றலுநின்
றந்தை தாயரை யனுமானத் தாலல
உஅரு திந்த ஞாலத் தெவ்வகை யறிவாய்
மெய்யுணர் வின்றிமெய்ப் பொருளுணர் வரிய

---

உஎஎ. என்றலும் - என்று பூதவாதி சொல்லலும். கேட்டு - மணிமேகலைகேட்டு.

உசச - எஎ. இவ்வடிகளிற் கூறப்பட்டுள்ளவற்றைப் பின்வருஞ் செய்யுட்கள் நன்குபுலப்படுத்தும்:—"அணிகொ ளாரத் தரசவை கேட்கெனப், பிணிகொண் மூஞ்சிப் பிசாசகன் சொல்லுவான், குணிகுணம் மெனுங் கூற்றில துலதென், றணிவைம் பூதங்க ளேதொழில் சொல்லுவேன்", "திண்ணெ னீநில நீர்வளி காயத்தார், கண்ணு மூக்கொடு நாமெய் செவிகளாய், வண்ண நாற்றஞ் சுவையினொ டூறொலி, யெண்ணுங் காலை யியைந்துழி யெய்துமே", "ஐந்துங் கூடி யறிவின்ப மாதியா, வந்து தோன்றி மதுமயக் காற்றலி, னந்தி நாளுங் குடஞ்சுடர் நாட்டம்போற், சிந்தி னுலவை சென்றினஞ் சேருமே", "உலகெ லாமவை யேயுயி ருண்டெனச், சொலவ லாருளா சொற்றெளிந் தேகின்று, பலக லாங்களுஞ் செய்ப பயனிலார், புலவ ராவதன் றேவங்குப் போர்தகே", "சென்ற காலத்துஞ் செல்கின்ற காலத்து, நின்ற காலத்தி னும்மிந் நிகழ்ச்சியே, யென்று மிவ்வுல கத்தன்மைத் தேயிது, வன்றதென் றுரைப் பாரயர்ப் பார்களே" நீல. பூத. ௩, ௪, ௫, ௬, ௭.

உஎகூ. முற்பிறப்பை எய்தப்பெறுதலின் - முற்பிறப்புணர்ச்சியைப் புத்தபீடிகையால் நான் அடையப்பெற்றதை; சாரியைநிற்க இரண்டனுருபு தொக்கது.

(உஎஅ) 'நன்றலவாயினும்' என்பதுமுதல் (உஅ0) 'உண்டோ' என்பது இறுதியாகவுள்ளவை மணிமேகலையின் உட்கோள்.

உஅ0. என்று நக்கிடுதலும் - என்று மணிமேகலை உட்கொண்டு மறுபிறப்பில்லையென்ற பூதவாதிகூற்றை நினைத்து நகைத்து, நகைத்ததென்னை யென்றுவினவிய அவனுக்குத் தான் பழம்பிறப்புணர்ந்ததைத்தெரிவித்தலும்.

உஅக - ௩. நீ பழம்பிறப்புணர்ந்தேனென்றது, மையலுறுவார்மனம் தெய்வமயக்கினும் கனவுறுதிறத்தினும் வேறுபடும் விதமேயாகும்; அது, பிரத்தியக்கமன்மையாற்சந்தேகமேயன்றிவேறில்லையென்று அவன் கூறலும்.

உஅ௩ - ௫. இவ்வடிகள், பிரத்தியக்கமன்றி அனுமானவளவைகொள்ளாத பூதவாதிக்கு அவ்வளவையுண்டென்று கூறுமுகத்தான் மறுமையுண்டென்று மணிமேகலை சாதித்ததைக்கூறின.

உஅ௬. மெய்யுணர்வு - சத்தியஞானம். மெய்ப்பொருள் - பரமார்த்த தத்துவங்கள்.

வைய மல்லதிது சொல்லப் பெறுயென
வுள்வரிக் கோலமோ டுன்னிய பொருளுரைத்
தைவகைச் சமயமு மறிந்தன ளாங்கென்.

உஎ.—சமயக்கணக்கர்தந்திறங்கேட்டகாதை முற்றிற்று.

---

உஎசு. ஐயமல்லது இது - இது சந்தேகமன்று. சொல்லப்பெறாய் - சொல்லாதே.

உசச - உஎரு. இவ்வடிகளிற் கூறப்பட்டுள்ள பூதவாதிகூற்றுக்களும் அவற்றிற்கு மணிமேகலை கூறிய விடையுமாகிய இவை, "இறைவனு மில்லை பிறந்தோர் பிறவார், அறனே யென்போன் றலைநின் றோனைப், பிறவியு மறவியும் பெற்றியி னுணர்ந்த, நறுமலர்க் கோதை யென்னினை நகுதி, யென்னினை போலு மிவ்வுரை கேட்டிங், கொன்னிய துரையென வுன்பிறப் புணர்த் துவை, யாங்குநிற் கொணர்ந்த வருந்தெய்வ மயக்கக், காம்பன தோளி கனமயக் குற்றனை,யென்றவ னுரைக்கு மினக்கொடி யல்லா, யன்றென் றவன்மு னயர்ந்தொழி வாயலை" (உக: கOரு - கஉ) எனக் கந்திற்பாவை மணிமேகலைக்கு வருவதுரைத்ததாக முன்வந்ததனோடு ஒப்புநோக்கற்பாலன.

உஎஅ. உள்வரிக்கோலம் - மறைந்த வேடம்.

உஎகூ. இக்காதையிற் கூறியவை பத்துமதங்களாகவிருப்ப, இங்கே 'ஐவகைச்சமயம்' என்றது இழுக்கன்றோவெனின், அளவைவாதமுதலிய ஐந்தும் ஒருவகையிலும், ஆசீவகவாதம்நிகண்டவாதமென்னுமிரண்டும் ஒருவகையிலும் அடங்குமென்பாராதலின், அமைக; "அவ்வுரு வென்ன வைவகைச் சமயமுஞ், செவ்விதின் றன்மையிற் சிந்தையின் வைத்திலேன்" (உகூ: சஉ - ச) என்று அறவணவடிகளுக்கு மணிமேகலை கூறியதாகப் பின்னும் வருதல் காண்க; "ஐம்பெருஞ் சமயமு மறந்தோற் றனவென" (பெருங். க. ௩சு: உசகூ.) ஆங்கு - வஞ்சிநகரத்தில்.

க - உஎகூ. (மணிமேகலை) சார்ந்து அளவைவாதியை யெய்தி இயம்பென, அவன் அளவைகளென்றனன் ; என்றவன் றன்னைவிட்டுச் சைவவாதியை நின்தெய்வம் எப்படித்தென்ன, அவன் இறைவனுருமென்றுரைத்தனன் ; பிரமவாதி முட்டை யென்றனன் ; கடல்வணன்புராணமோதினன் காப்பென்றுரைத்தனன் ; அவர்றோடு வேதியனுரையின் விதியுங்கேட்டு இவருரை இசையாவென்று நினைந்து, ஆசீவகனை நோக்கி, இறை யார் ? நூற்பொருள்யாது? என, அவன் 'வகையிது' என்ன, நிகண்டவாதியை நோக்கி, 'மெய்ப்படவிளம்பு' என, அவன் அது வீடாகுமென்றனன்; அவன்பின் சாங்கியன் செப்பியதிறமுங்கேட்டு 'வைசேடிக ! நின் வழக்கையுரை' என்ன, அவனும் உரைத்தனன் ; உடனே பூதவாதியைநோக்கி, 'நீபுகல்' என்ன, அவன் 'வினைதுய்த்தல்பொய்ம்மை' என்றலும், நக்கிடுதலும், அவன் இல்லையென்றலும், 'எள்ளலைசெயதிவாய் ; இது சொல்லப் பெறாய்' என உரைத்து ஐவகைச் சமயமுமறிந்தனளென வினைமுடிவுசெய்க.

---

இருபத்தேட்டாவது

# கச்சிமாநகர்புக்ககாதை.

[இருபத்தேட்டாவது தாயரோடு அறவணரடிகளையுந்தேர்ந்து கச்சிமாநகர்க்கட்சென்றபாட்டு.]

ஆங்குத் தாயரோ டறவணர்த் தேர்ந்து
வாங்குவிற் றானை வானவன் வஞ்சியின்
வேற்று மன்னரு முழிஞைவெம் படையும்
போற்புறஞ் சுற்றிய புறக்குடி கடந்து
௫ சுருங்கைத் தூம்பின் மனைவளர் தோகையர்
கருங்குழல் கழீஇய கலவை நீரு
மெந்திர வாவியி லிளைஞரு மகளிருந்
தந்தமி லாடிய சாந்துகழி நீரும்

---

௧. ஆங்கு - வஞ்சிமாநகரத்தில். தாயர் - மாதவியையும் சுதமதியையும்.

௨. வாங்குவில் - வளைந்தவில். வானவன் - சேரன்.

௩. வேற்றுமன்னர் - பகையரசர். உழிஞைவெம்படை - உழிஞை மாலையைச் சூடி அரணைக்காக்கும் வெம்படை. உழிஞை, புறமதிலைவளைப் போரும் அதனைக்காப்போருமாகிய இருதிறத்தினரும் அணிதற்குரியது.

௪. புறக்குடி-புறத்தேயிருத்தற்குரிய படைவகைமாந்தரும் குடியிருக்குமிடம்; என்றது, புறநகரத்தை; இது புறஞ்சிறையென்றும், புறப்படைவீடென்றும், புறஞ்சேரியென்றுங் கூறப்படும்.

௩-௪. புறநகர், நால்வகைப் படைவீரரும் பிறருஞ் செறிந்திருத்தற்கு இடமாதலின், இங்ஙனங்கூறப்பட்டது.

௫. சுருங்கை - நீர்செல்லுதற்குக் கற்களாற் கரந்துபடுத்தது; தூம்பு - சலதாரை; சுருங்கையாகிய தூம்பென்க; "நீணிலம் வகுத்து நீர்நிரந்து வந்தி ழிதரச், சேணிலத்தி யற்றிய சித்திரச் சுருங்கை சேர், கோணிலத்து வெய்யவாங் கொடுஞ்சுரத் தடங்கிடங்கு" (சீவக. ௧௪௨); "சுருங்கை வீதி மருங்கிற் போகி" (சிலப். ௧௪: ௬௫); சுருங்கையின் இயல்பு இருபதாம் பரிபாடலாலுமுணரப்படும்.

(௫) 'சுருங்கைத் தூம்பின்' என்பது 'பாய்தலின்' (௧௭) என மேல்வருவதனோடு சென்றியையும்.

௬. கழீஇய - கழுவிய.

௭. எந்திரவாவி - வேண்டும் பொழுது நீரை நிறைத்தற்கும் வேண்டாதபொழுது போக்குதற்குமுரிய யந்திரங்களையுடைய பொய்கை; இஃது, இலவந்திகையெனவுங் கூறப்படும். இளைஞர் - ஆடவர்.

௮. ஆடிய - பூசிய. சாந்து - சந்தனம்.

புவிகா வலன்றன் புண்ணிய நன்னாட்
௧௦ சிவிறியுங் கொம்புஞ் சிதறுவிரை நீரு
மேலோ மாதவர் பாதம் விளக்குஞ்
சீல வுபாசகர் செங்கைநறு நீரு
மறஞ்செய் மாக்க ளகின்முதல் புகைத்து
நிறைந்த பந்தற் றசும்புவார் நீரு
௧௫ முறுப்புமுர ணுறாமற் கந்தவுத் தியினாற்
செறித்தரைப் போர்தஞ் செழுமனை நீரு
மென்றிந் நீரே யெங்கும் பாய்தலிற்
கன்றிய கராமு மிடங்கரு மீன்களு

---

௯. காவலன் - அரசன். புண்ணியநன்னாள் - புண்ணியத்தையுடைய நல்ல நட்சத்திரத்தில்; என்றது, அரசனுடைய சன்ம நட்சத்திரத்திலென்றவாறு.

௧௦. சிவிறி கொம்பு என்னுமிரண்டும் நீரைவீசுங்கருவிவிசேடங்கள்; சிவிறியைப் பெருந்துருத்தியென்று கூறுவர்.

௯ - ௧௦. ஒருவன் சீவித்திருக்குங்காறும் அவன் பிறந்தநட்சத்திரத்திலும் இறந்தபின்பு அவன் இறந்த திதியிலும் சிறப்புச் செய்யவேண்டுமென்பது தருமநூற்றுணிபு.

௧௧. மேலோமாதவர் - மேன்மையையுடைய முனிவர்; ஐ, சாரியை.

௧௨. சீலவுபாசகர் - பஞ்சசீலத்தையுடையஉபாசகர்; பௌத்தரில் இல்லறம் நடத்தும் ஆடவரையும் மகளிரையும் முறையே உபாசகரென்றும் உபாஸகைகளென்றுங்கூறுதல் மரபு.

௧௪. பந்தல் தசும்பு - தண்ணீர்ப்பந்தரிலுள்ள நீர்க்குடம்; இனி, உலோகத்தாற் குழாய் வடிவமாகச் செய்யப்பட்ட உறுப்பினையுடைய தூபமுட்டியுமாம்; பந்தல், அம்பணமெனவும் வழங்கும்; இதனை, "கிம்புரிப் பகுவா யம்பண நிறைய" (நெடுநல். ௯௪) என்பதில், 'அம்பணம்' என்பதற்கு ஆசிரியர் நச்சினார்க்கினியர் 'பந்தல்' என்று பொருள் செய்திருத்தலாலுணர்க. வார்நீர் - ஒழுகுகின்றநீர்.

௧௫. உறுப்பு முரணுறாமல் - உறுப்புக்கள் மாறுபடாமல்; "நேர்கட்டி செந்தே னிரியாசம் பச்சிலை, யாரு மகிலுறப்போ டாறு" (சிலப். ௫: ௧௪-அடியார்.) கந்தவுத்தியினால் - சேர்த்தற்குரிய வாசனைப் பண்டங்களால்; உத்தி - சேர்த்தல்; இது யுக்தியென்னும் வடமொழிச்சிதைவு.

௫ - ௧௭. சுருங்கைத்தூம்பிற் பாய்தலினென்க.

௧௮. கன்றிய - பகைமையிற்றழும்பிய. கராம் இடங்கர் என்னுமிரண்டும் முதலைச்சாதிவிசேடங்கள்; "கொடுந்தாண் முதலையு மிடங்கருங் கராமும்" குறிஞ்சி. ௨௫௭.

(பி - ம்) ௧௪. 'தசும்படார்நீரும்' ௧௫. 'கந்தபுத்தியினால்' ௧௬. 'செறித்தளைப் போர்தஞ் செழுமணிநீரும்' ௧௭. 'எங்கும்பாத்தலின்'

௨௫ பசுமிளை பரந்து பஃறொழி னிறைந்த
வெள்ளிக் குன்ற முள்கிழிந் தன்ன
நெடுநிலை தோறு நிலாச்சுதை மலருங்
கொடிமிடை வாயில் குறுகினள் புக்குக்
கடைகாப் பமைந்த காவ லாளர்
௩௰ மிடைகொண் டியங்கும் வியன்மலி மறுகும்
பன்மீன் விலைஞர் வெள்ளுப்புப் பகருநர்
கண்ணொடை யாட்டியர் காழியர் கூவியர்
மைந்நிண விலைஞர் பாசவர் வாசவ
ரென்னுநர் மறுகு மிருங்கோ வேட்களுஞ்
௩௫ செம்பு செய்ஞ்ஞருங் கஞ்ச காரரும்
பைம்பொன் செய்ஞ்ஞரும் பொன்செய் கொல்லரு
மரங்கொஃ றச்சரு மண்ணீட் டாளரும்

---

ணென்றுரைக்கு நூல்" குறள். ௭௪௩.

௨௫. மிளை - காவற்காடு. ௪ - ௨௭. கடந்து குறுகினள் புக்கென்க.

௨௬ - அ. உள் கிழிந்தன்ன வாயில். புக்கு - புகுந்து.

௨௯. கடைகாப்பமைந்த - வாயில் காத்தற்கமைந்த.

௩௦. மிடைகொண்டு - நெருங்குதல்கொண்டு.

௩௧. மீன்விலைஞர் - மீன்விலைப்பரதவர், உப்புப்பகருநர் - உப்புவிற்பார்; அவர், உமணரும் உமட்டியரும் ; அளவருமாம் ; பகர்தல் - விற்றல்.

௩௨. கள் நொடையாட்டியர் - கள்ளைவிற்கும் வலைச்சியர்; நொடை - விலை ; "நறவுநொடை" (பெரும்பாண். ௧௪௧.) காழியர் - பிட்டுவாணிகர். கூவியர் - அப்பவாணிகர் ; "காரகற் கூவியன் பாகொடு பிடித்த" ஷை. ௩௭௭.

௩௩. மைந்நிண விலைஞர் - ஆட்டுவாணிகர். பாசவர் - இலையமுதிடுவார் ; அன்றி, கயிறுதிரித்துவிற்பாரும், பச்சிறைச்சி நட்டிறைச்சி விற்பாருமாம். வாசவர் - பஞ்சவாசம்விற்பார் ; அவை, "தக்கோலந் தீம்பூத் தகைசா லிலவங்கம், கப்பூரஞ் சாதியோ டைந்து" (சிலப். ௫ : ௨௬ - மேற்) என்பன.

௩௪. கோவேட்கள்-குயவர்; இப்பெயர் வேட்கோவரெனவும் வழங்கும்.

௩௫. செம்பு செய்ஞ்ஞர் - செம்பு கொட்டிகள். கஞ்சகாரர் - வெண்கலக்கன்னார்.

௩௬. பைம்பொன்செய்ஞ்ஞர் - பொற்பணிசெய்வோர். பொன்செய் கொல்லர் - உருக்குத்தட்டார்.

௩௭. மரங்கொஃறச்சர்-மரத்தைவெட்டுந்தச்சர்; கொல்லல்-வெட்டல்.

(பி - ம்.) ௨௭. 'நெடுநிலைமனைதொறும்' ௩௩. 'பைந்நிணவிலைஞர்' ௩௫. 'செய்நரும்' ௩௭. 'மரங்கொறச்சர்'

வரந்தர வெழுதிய வோவிய மாக்களுந்
தோலின் றுன்னருந் துன்ன வினைஞரு
௪௦ மாலைக் காரருங் காலக் கணிதரு
நலந்தரு பண்ணுந் திறனும் வாய்ப்ப
நிலங்கலங் கண்ட நிகழக் காட்டும்
பாண ரென்றிவர் பல்வகை மறுகும்
விலங்கரம் பொருத வெள்வளை போழ்நரோ
௪௫ டிலங்குமணி வினைஞ ரிரீஇய மறுகும்
வேத்தியல் பொதுவிய லென்றிவ் விரண்டின்
கூத்தியல் பறிந்த கூத்தியர் மறுகும்
பால்வே றாக வெண்வகைப் பட்ட
கூலங் குவைஇய கூல மறுகு
௫௦ மாகதர் சூதர்வே தாளிகர் மறுகும்

மண்ணீட்டாளர் - சிற்பாசாரிகள்; அஃதிச் சுதையாற் பாவையுள்ளிட்டன பண்ணுவாரென்றும் குயவரென்றுமாம்; மணி. ௬: ௪௭.

௩௮. ஓவியமாக்கள் - சித்திரகாரிகள்.

௩௯. தோலின் றுன்னர் - செம்மார், உறைகாரரும், பறம்பர் முதலாயினருமாம். துன்னவினைஞர் - தையற்காரர்.

௪௦. மாலைக்காரர் - மாலைதொடுப்போர். காலக்கணிதர் - சோதிட நூலோர்; இவர்கள் கணிகளெனவுங் கூறப்படுவர்.

௪௧. பண் - இசை; பாலை குறிஞ்சி மருதம் செவ்வழியென்னும் பெரும்பண்ணுமாம்; திறம் - அவற்றின் பிரிவுகள்; அவை இருபத்தொரு வகைப்படும்.

௪௨. நிலம் - மூவகைத்தானம்; அவை எழுத்தும் அசையும் சீரும். கலம் - யாழ். கண்டம் - குரல்.

௪௩. பாணர் - இசைக்காரர்; இசைப்பாணரும், யாழ்ப்பாணரும், மண்டைப்பாணருமெனப் பாணர் பலவகையினராவார்.

௪௪. விலங்கரம் - வாளரம்; வளைபோழ்நர் - சங்கறுப்பார்.

௪௫. மணிவினைஞர் - முத்துக்கோப்பார்.

௪௭. கூத்தியல்பு - கூத்தினிலக்கணம். கூத்தியர் - பதியிலார்.

௪௬ - எ. மணி. ௨: ௭௮ - ௯. ௪௮. பால் - பகுதி.

௪௯. குவைஇய - குவித்த. கூலமறுகு - கூலக்கடைத்தெரு.

௪௮ - ௯. எண்வகைக்கூலங்களாவன: "நெல்லுப் புல்லு வரகு தினை சாமை, இறுங்கு தோரை யவாடி கழைநெல்லே" (சிலப். ௫: ௨௩-அடி யார்) என்பன; கூலம் பதினெண்வகைத்தென்பர் (சிலப். ப. ௨௫௦, ௪௪௪) கூத்தநூலார்.

௫௦. மாகதர் - இருந்தேத்துவார். சூதர் - நின்றேத்துவார். வேதாளிகர் - பலவகைத்தாளத்தொடேத்துவார்; "சூதர் வாழ்த்த மாகதர் நுவல, வேதா

(பி - ம்.) ௩௮. 'வரந்தரவெழுதும்' ௩௯. 'தோலின்றெழிலரும்'

போகம் புரக்கும் பொதுவர்பொலி மறுகுங்
கண்ணுழை கல்லா நுண்ணூற் கைவினை
வண்ண வறுவையர் வளந்திகழ் மறுகும்
பொன்னுரை காண்போர் நன்மனை மறுகும்
௫௫ பன்மணி பகர்வோர் மன்னிய மறுகு
மறையோ ரருந்தொழில் குறையா மறுகு
மரைசியன் மறுகு மமைச்சியன் மறுகு
மெனைப்பெருந் தொழில்செ யேனோர் மறுகு
மன்றமும் பொதியிலுஞ் சந்தியுஞ் சதுக்கமும்
௬௰ புதுக்கோள் யானையும் பொற்றார்ப் புரவியுங்
கதிக்குற வடிப்போர் கவின்பெறு வீதியுஞ்
சேணோங் கருவி தாழ்ந்தசெய் குன்றமும்

---

ளிகரொடு காழிகை யிசைப்ப" (மதுரை. ௬௭௰ - ௭௧); "சூதர் மாகதர் வேதா ளிகரொடு", "மாகதப் புலவரும் வைதா ளிகருஞ், சூதரும்" சிலப். ரு: ௪௮; ௨௬: ௭௪ - ௫.

௫௧. பொதுவர் - பொதுமகளிர். ௫௨. நுழைகல்லா - நுழையாத.

௫௩. வண்ணவறுவையர் - பலநிறங்களையுடைய உடைநெய்வோர்; புடைவை விற்பாருமாம்; "நோக்குநுழை கல்லா நுண்மைய......அறுவை" பொருந. ௮௨-௩.

௫௪. பொன்னுரைகாண்போர் - பொன்னை உரைத்தவுரையை அறுதியிடும் பொன்வாணிகர்.

௫௫. பன்மணிபகர்வோர் - பலவகைப்பட்ட இரத்தினங்களை விற்கும் வாணிகர்.

௫௬. அந்தணர்வீதி. ௫௭. இராசப்பெருந்தெருவும் மந்திரிகள்வீதியும்.

௫௮. எனை - எனை; விகாரம். ஏனோர் - சேனாதிபதிகள் முதலியோர்.

௫௯. "மன்றமும் பொதியிலும்" (மணி. ௨௦: ௩௰.) சந்தி - முச்சந்தியும் ஐஞ்சந்தியும். சதுக்கம்- நாற்சந்தி; "சதுக்கமுஞ் சந்தியும் புதுப்பூங் கடம்பு, மன்றமும் பொதியிலும்" முருகு. ௨௨௫ - ௬.

௬௰. புதுக்கோள் யானை - புதிதாகப்பிடிக்கப்பட்டு வந்த யானை; (மணி. ௧௨: ௬௫; ௧௯: ௬௮.) பொற்றார்ப்புரவி - பொன்னாலாகிய கிண்கிணி மாலையையணிந்த குதிரை.

௬௧. கதிக்குற - நடையில் மேம்பாடுற. வடிப்போர் - பயிற்றும் யானைப் பாகரும், அச்சுவ சாரியரும்; வடித்தல் - பயிற்றல்; "வடிகயி றுய்ந்து" சீவக. ௭௬௪.

௬௨. சேண் - நெடுந்தூரம். செய்குன்றம் - கட்டுமலை.

(பி - ம்.) ௫௧. 'போகம்புரக்குமுழவர்' ௫௨. 'ஒண்ணூற்கைவினை' ௫௯. 'மன்றமுங் கவலையும்' ௬௧. 'கவின்கொள்வீதியும்'

வேணவா மிகுக்கும் விரைமரக் காவும்
விண்ணவர் தங்கள் விசும்பிட மறந்து
௬௫ நண்ணுதற் கொத்த நன்னீ ரிடங்களுஞ்
சாலையுங் கூடமுந் தமனியப் பொதியிலுங்
கோலங் குயின்ற கொள்கை யிடங்களுங்
கண்டுமகிழ் வுற்றுக் கொண்ட வேடமோ
டந்தர சாரிக ளமர்ந்தினி துறையு
௭௦ மிந்திர விகார மெனவெழில் பெற்று

---

௬௩. வேணவா - வேட்கையாலுண்டாகிய அவா; வேட்கையாவது:— பொருள்கண்மேற் றோன்றும் பற்றுள்ளம்; அவாவாவது:— அப்பொருள்களைப் பெறவேண்டுமென்று மேன்மேல் நிகழும் ஆசை; "செய்யுண் மருங்கின் வேட்கை யென்னு, மையெ னிறுதி யவாமுன் வரினே, மெய்யொடுங் கெடுத லென்மனார் புலவர், டகார ணகார மாதல் வேண்டும்" (தொல். உயிர். சூ. ௨௮௮) என்பதனால் முடித்துக்கொள்க.

௬௫. நீரிடங்கள் - பொய்கை முதலியவைகள்.

௬௬. சாலை - அறச்சாலைகள். தமனியப்பொதியில் - பொன்னாலாகிய அம்பலம்; 'பொன்னம்பலமு முண்டு' (சிலப். பதி. ௪௦ - ௪௧) என்பர் அடியார்க்குநல்லார்; "கண்ணெலாங் கவர்வன கனக கூடமும்" (திருவிளை. நகர. ௭) என்று வருதல் காண்க.

௬௭. கோலங்குயின்ற - சித்திரமெழுதப்பெற்ற. கொள்கையிடங்கள் - விரதங்களை அனுட்டித்திருத்தற்குரிய தவச்சாலைகள்; கொள்கை - விரதம்; "தாவில் கொள்கைத் தந்தொழின் முடிமார்" (முருகு. ௯௬); "கோவலன் சென்றக் கொள்கையி னிருந்த, காவுந்தி யையையைக் கைதொழு தேத்தி" சிலப். ௧௪ : ௧௫ - ௬.

௨௧ - ௬௮. வியன்மலி மறுகுமுதற் கொள்கையிடங்களிறுதியாகவுள்ள இடவிசேடங்களைக் (மணிமேகலை) கண்டென்க. இவ்வடிகளிற் போலப் பற்பலசாதியாருடைய குடியிருப்புக்களையும் இளங்கோவடிகள் கூறியிருத்தல்காண்க; "வேயா மாடமும் வியன்கல விருக்கையும்............ பாடல்சால் சிறப்பிற் பட்டினப் பாக்கமும்" சிலப். ௫ : ௭ - ௫௮.

௬௯. அந்தரசாரிகள் - ஆகாயசாரிகள். அமர்ந்து - விரும்பி.

௭௦. இந்திரவிகாரம் - புத்தனாலயத்தின் இந்திரனால் நிருமிக்கப்பட்ட அரங்கு; விகாரம் - 'கையாற் கருவியாற் பண்ணாது மனத்தால் நிருமித்தல்' (சிலப். ௧௦ : ௧௪) என்பர் அடியார்க்குநல்லார்.

[illegible] - ௭௦. இந்திர விகாரமென்றது, காவிரிப்பூம்பட்டினத்துப் புத்த சைத்தியத்துள்ள ஏழரங்கினையும்; இஃது, 'அந்தர சாரிக ளமர்ந்தினி துறையும்' என்பதனாற்பெறப்பட்டது; "அந்தர சாரிக ளறைந்தனர் சாற்று, மிந்திர விகார மேழுடன் போகி" (௧௦ : ௧௩ - ௪), "இந்திர விகார மேழுடன் புக்காங், கந்தர சாரிக ளாலயம் பதிப்பர்" (௨௭ : ௯௨ - ௩) எனச் சிலப்பதிகாரத்து வருதல் காண்க.

(பி - ம்.) ௬௪. 'விசும்பிடை'

நவையறு நாத னல்லறம் பகர்வோ
ருறையும் பள்ளிபுக் கிறைவனை நல்லாள்
கோவலன் றாதை மாதவம் புரிந்தோன்
பாதம் பணிந்துதன் பாத்திர தானமுந்
எரு தானப் பயத்தாற் சாவக மன்னவ
னூனமொன் றின்றி யுலகாள் செல்வமுஞ்
செல்வற் கொணர்ந்தத் தீவகப் பீடிகை
யொல்காது காட்டப் பிறப்பினை யுணர்ந்தது
முணர்ந்தோன் முன்ன ருயர்தெய்வந் தோன்றி

---

எக. நவை - குற்றம். நாதன் - புத்தன். நல்லறம் - அருளறம். பகர்வோர் - சங்கத்தார்.

எஉ. பள்ளி - தவத்தோருறைவிடம்; "ஐயருறை பள்ளியிடம்" சீவக. களஅஉ.

எ௦ - எஉ. இந்திரவிகாரம் பள்ளிக்கு உவமம்.

எ௩. கோவலன்றாதை-மாசாத்துவான்; இவன், மதுரையிற் கோவலன் கொலையுண்டது முதலியவற்றை மாடலனென்னும் மறையவன் கூறக்கேட்டுத் தன் பொருளையெல்லாம் தானஞ்செய்துவிட்டுக் காவிரிப்பூம்பட்டினத்திற் புத்தசைத்தியத்துள்ள ஏழுவிகாரங்களிலுமிருந்து நோற்கும் பௌத்த முனிவர்களுக்கு முன்னேசென்று துறவுபூண்டானாதலின், 'மாதவம்புரிந்தோன்' என்றார், இதனை, "மைந்தற் குற்றது மடந்தைக் குற்றதுஞ், செங்கோல் வேந்தற் குற்றதுங் கேட்டுக், கோவலன் றாதை கொடுந்துய ரெய்தி, மாபெருந் தானமா வான்பொரு ளீத்தாங், கிந்திர விகார மேழுடன் புக்காங், கந்தர சாரிக ளாறைம் பதின்மர், பிறந்த யாக்கைப் பிறப்பற முயன்று, துறந்தோர் தம்முன் றுறவி யெய்தவும்" (உஎ : அஅ - கூரு); "மாசாத்துவான் றன்றுறப்பவும்" (உக : உரைப்பாட்டுமடை) எனச் சிலப்பதிகாரத்து வருதலாலும், இக்காதையிற் பின்னே வரும் 'தையல்கேள்' (கூகூ) என்பது முதலியவற்றாலும் அறிந்துகொள்க.

எச. தன் பாத்திரதானம் - தன்கையிலுள்ள அமுதசுரபியென்னும் பாத்திரத்தாற் செய்யப்படும் அன்னதானம்.

எரு. தானப்பயம் - முற்பிறப்பிற் செய்த அன்னதானத்தாலுண்டாகிய புண்ணியம்; பயம் - பிரயோசனம். சாவகமன்னவன் - சாவகநாட்டரசனாகிய புண்ணியராசன்.

எரு - சா. உலகாளுதற்குக்காரணம் தானப்பயன்.

எசா. செல்வற் கொணர்ந்து - புண்ணியராசனை அழைத்துவந்து. பீடிகை - புத்தபீடிகை.

எஅ. ஒல்காது- தளராது. எஎ - அ. பீடிகையைக்காட்ட.

எகூ. உணர்ந்தோன் - புண்ணியராசன். தெய்வம் - தீவதிலகை.

(பி - ம்.) எச: 'பாத்திரத்தானமும்' எஅ. 'ஒல்லாதுகாட்ட'

௮௦ மனங்கவல் கெடுத்தது மாநகர் கடல்கொள
வறவண ரடிகளுந் தாயரு மாங்குவிட்
டிறவா திப்பதிப் புகுந்தது கேட்டதுஞ்
சாவக மன்னன் றன்னொ டெய்தத்
தீவகம் விட்டித் திருநகர் புகுந்ததும்
௮௫ புக்கபி னந்தப் பொய்யுரு வுடனே
தக்க சமயிக டந்திறங் கேட்டது
மவ்வவர் சமயத் தறிபொரு ளெல்லாஞ்
செவ்வி தன்மையிற் சிந்தைவை யாதது
நாத னல்லறங் கேட்டலை விரும்பி
௯௦ மாதவற் றேர்ந்து வந்த வண்ணமுஞ்
சொல்லின ளாதலிற் றூயோய் நின்னை யென்
னல்வினைப் பயன்கொ ளுன்கண் டதுவெனத்
தையல் கேணின் றாதையுந் தாயுஞ்
செய்ததீ வினையிற் செழுநகர் கேடுறத்

---

௮௦. மனங்கவல் கெடுத்ததும் - உள்ளம் கவலைகொள்ளுதலைக் கெடுத்ததும்; கவல் - கவலுதல்; முதனிலைத்தொழிற்பெயர். நகர் - காவிரிப்பூம்பட்டினம்.

௮௨. இப்பதியென்றது, வஞ்சியை. கேட்டதும் - (தீவதிலகையால்) தான் கேட்டதும்.

௮௪. தீவகம் - மணிபல்லவம்.

௮௫. புக்கபின் - புகுந்து கண்ணகி கோட்டம் தொழுதபின். பொய்யுரு - மாதவன் வடிவு.

௮௬. சமயிகள் - அளவைவாதிமுதலியோர்.

௮௮. செவ்விது அன்மையின் - திருத்தமுடையன அல்லாமையின்; செவ்விது, பன்மையொருமைமயக்கம்.

௮௯. நாதனல்லறம் - புத்தன் கூறிய தருமங்களை; மணி. ௨௮: ௭௧.

௯௦. மாதவற்றேர்ந்து - அறவணவடிகளைத்தேடி.

௯௧. 'தூயோய்' என்றது முதலியன கோவலன்றாதை வார்த்தை.

௯௩. தையல், விளி. தாதையும் தாயும் - கோவலனுங் கண்ணகியும்.

௯௪. தீவினை - முற்பிறப்பிற்சங்கமனைக்கொலைசெய்ததனாலாகியபாவம். நகர் - மதுரை.

(பி - ம்.) ௮௦. 'புகுந்ததன் கேட்டதும்' ௮௩. 'தன்னுடனெய்த' ௮௪. 'தீவகம் விடஇத்திரு' ௮௫. 'புக்கவளிந்த' ௮௮. 'செவ்விதன்மை' ௯௪. 'திருநகர்'

கூரு துன்புற விளிந்தமை கேட்டுச் சுகத
னன்புகொ ளறத்திற் கருகனே னாதலின்
மனைத்திற வாழ்க்கையை மாயமென் றுணர்ந்து
தினைத்தனை யாயினுஞ் செல்வமும் யாக்கையு
நிலையா வென்றே நிலைபெற வுணர்ந்தே
கoo மலையா வறத்தின் மாதவம் புரிந்தேன்
புரிந்த யானிப் பூங்கொடிப் பெயர்ப்படூஉந்
திருந்திய நன்னகர் சேர்ந்தது கேளாய்
குடக்கோச் சேரலன் குட்டுவர் பெருந்தகை
விடர்ச்சிலை பொறித்த வேந்தன் முன்னாட்

---

கூரு. விளிந்தமை - இறந்தமை. சுகதன் - புத்தன்; நல்ல வருகை யையுடையவனென்று பொருள்; நல்லொழுக்கத்தையுடையவனென்றுமாம்.

கூச - ரு. தீவினையாற் கொலையுண்டிறந்தமையைக்கேட்டு.

கூசு. அன்புகொள் அறம் - நல்லறம். அருகன் - பக்குவி.

கூஎ. மனைத்திறவாழ்க்கை - இல்வாழ்க்கை. மாயம் - பொய்.

கூஅ. தினைத்தனையாயினும் - தினையளவாவது.

கூஅ - கூ. மணி. உஉ: கருரு - சு.

கoo. பௌத்ததருமம் பூர்வோத்தர விரோதமில்லாததென்பராதலின், 'மலையாவறத்தின்' என்றார்; மலைதல் - மாறுபடல்; "முரணாத் திருவற மூர்த்தியை" (சு), "முன்பின் மலையா மங்கல மொழியின்" (உசுக) என நo - ஆம் காதையில் வருதலுங்காண்க. புரிந்தேன் - செய்தேன்.

கoக. கொடி - வஞ்சி. கoஉ. நகர் - வஞ்சிநகர்.

கoக - உ. இந்நகர், "பொற்கொடிப் பெயர்ப்படூஉம் பொன்னகர்" (உசு: கூஉ) என்று முன்னுங்கூறப்பட்டது.

கoங. குடக்கோச்சேரலன் - மேனாட்டிற்கு அரசனாகிய சேரன்; குடக்கு - மேற்கு; கொடுந்தமிழ்நாடு பன்னிரண்டனுள் ஒன்றாகிய குடநாட்டிற்கு அரசனென்பதுபற்றிக் குடக்கோவென்றானென்னுமமையும். குட்டுவர் பெருந்தகை - குட்டநாட்டார்க்கு அரசன்; குட்டமும் கொடுந்தமிழ் நாடுகளுள் ஒன்று; "குடக்கோக் குட்டுவன்" (சிலப். உசு : சுக); "இயறேர்க் குட்டுவன்" **சிறுபாண்.** சகூ.

கoச. விடர்ச்சிலை பொறித்த வேந்தன் - நெடுஞ்சேரலாதன்; இவன் வடநாட்டரசர்களைவென்று சென்று இமயமலையில் தனது இலச்சினையாகிய விற்பொறியைப்பொறித்தமையால், இமயவரம்பனெனவும், விடர்ச்சிலை பொறித்தவேந்தனெனவும் பெயர்பெற்றான்; இவனை, இமயவரம்பன்

(பி - ம்.) கூரு - சு. 'விளிந்தமைகேட்டுச் சுகத்த, னங்கொன்றறத் திற்கு' கூஅ. 'தினைத்தனைத்தாயினும்' கூகூ. 'நிலையாதென்றே நிலைபெற வுணர்ந்து' கoக-உ. 'பெயர்படுதிருந்திய'

௧௦௫ துப்படு செவ்வாய்த் துடியிடை யாரொடு
இப்பொழில் புகுந்தாங் கிருந்த வெல்லையு
ளிலங்கா தீவத்துச் சமனொளி யென்னுஞ்
சிலம்பிணை யெய்தி வலங்கொண்டு மீளுந்
தரும சாரணர் தங்கிய குணத்தோர்
௧௧௦ கருமுகிற் படலத்துக் ககனத் தியங்குவோ
ரரைசற் கேது வவ்வழி நிகழ்தலிற்
புரையோர் தாமுமிப் பூம்பொழி லிழிந்து
கற்றலத் திருந்துழிக் காவலன் விரும்பி
முற்றவ முடைமையின் முனிகளை யேத்திப்

---

நெடுஞ்சேரலாதனென்பவன் கூறுவர்; இது, பதிற்றுப்பத்தில் இரண்டாம் பத்தாலுணரப்படும்; "இமயஞ் சூட்டிய ஏம விற்பொறி, மாண்வினை நெடுந்தேர் வானவன்" (௩௯) எனப்புறநானூற்றிலும், "விடர்ச்சிலை பொறித்த விறலோன்" (௨௮: ௧௩௩) எனச்சிலப்பதிகாரத்திலும் இவன் கூறப்பட்டிருத்தல்காண்க.

௧௦௫. துப்பு - பவளம். துடி - உடுக்கை.

௧௦௬ - ௯. சேரலனும் பெருந்தகையுமாகிய வேந்தன் முன்னொருகாலத்துத் துடியிடையாரொடும் இப்பொழிலிற்புகுந்து இருந்தவிடத்தென்க.

௧௦௭ - ௯. இலங்கைத்தீவத்துள்ள சமனொளியென்னுமலையையடைந்து வலங்கொண்டு மீண்ட சாரணர். இம்மலை, சமந்தமென்றும் சமந்தகூடமென்றும் பெயர்பெறும். இதன் விவரணம், இந்நூல் ௧௧- ஆம்காதை ௨௨-ஆம்அடிக்குறிப்பிற் கூறப்பட்டது. தங்கிய குணத்தோர் - குணங்கள் தங்கப்பெற்றோர்.

௧௧௦. முகிற்படலம் - மேகக்கூட்டம். ககனம் - ஆகாயம்; ககனத்தியங்கல் இருத்திகளில் ஒன்று.

௧௧௧. அரசற்கு - இமயவரம்பனுக்கு. ஏது அவ்வழி நிகழ்தலின் - நல்வினையாகிய காரணம் பயனளித்தற்கு அவ்விடத்தே தோற்றுதலினாலே.

௧௧௨. புரையோர் - மேற்கூறிய தருமசாரணர்.

௧௦௯ - ௧௨. சாரணரும் குணத்தோரும் இயங்குவோருமாகிய புரையோர்.

௧௧௩. கற்றலத்து - சிலாதலத்தில். காவலன் - சேரன்.

௧௦௬ - ௧௪. வேந்தன் இருந்தவெல்லையுள் அவனுக்கு ஏது நிகழ்தலிற் புரையோரும் இழிந்து அப்பொழிலிற் கற்றலத்திருந்தபொழுது.

௧௧௪. முனிகளை - தருமசாரணரை.

(பி - ம்.) ௧௦௫. 'துவர்படுசெவ்வாய்' ௧௦௯ - ௧௦. 'தருமசாதனர், தன்னின் மூத்தார்க்கு முகிற்படலத்திற்கக' ௧௧௪. 'முனிகளைப்பேவிப்'

௧௧௫ பங்கயச் சேவடி விளக்கிப் பான்மையி
னங்கவர்க் கறுசுவை நால்வகை யமிழ்தம்
பாத்திரத் தளித்துப் பலபல சிறப்பொடு
வேத்தவை யாரொடு மேத்தின னிறைஞ்சலிற்
பிறப்பிற் றுன்பமும் பிறவா வின்பமு
௧௨௦ மறத்தகை முதல்வ னருளிய வாய்மை
யின்ப வாரமு திறைவன் செவிமுதற்
றுன்ப நீங்கச் சொரியு மந்நா
ணின்பெருந் தாதைக் கொன்பது வழிமுறை
முன்னோன் கோவலன் மன்னவன் றனக்கு
௧௨௫ நீங்காக் காதற் பாங்க னாதலிற்
றூங்கா நல்லறந் தானுங் கேட்டு
முன்னோர் முறைமையிற் படைத்ததை யன்றித்
தன்னா னியன்ற தனம்பல கோடி
யெழுநா ளெல்லையு மிரவலர்க் கீத்துத்
௧௩௦ தொழுதவம் புரிந்தோன் சுகதற் கியற்றிய

---

௧௧௬. அறுசுவையாவன:—கைப்பு, கார்ப்பு, புளிப்பு, உவர்ப்பு, துவர்ப்பு, தித்திப்பு (குறள். ௨௨௦. பரி) என்பன. நால்வகை யமிழ்தமாவன:— உண்பன, தின்பன, நக்குவன, பருகுவன; (மணி. ௨அ: ௨௪௧ - ௨.) அமிழ்தம் - உணவு.

௧௧௫ - அ. காவலன், விரும்பி ஏத்தி விளக்கி அளித்து ஏத்தி இறைஞ்சலினென்க.

௧௨௦. அறத்தகைமுதல்வன் - புத்தன்; தருமராசனென்றவாறு. வாய்மை - நால்வகைச்சத்தியம்.

௧௧௯ - ௨௦. மணி. ௨: ௬௪ - ௭; ௩௦: ௧அ௬ - அ.

௧௨௧. இறைவன் செவிமுதல் - அரசனுடைய செவியிடத்தே.

௧௨௦ - ௧. வாய்மையாகிய அமுதை.

௧௨௩. நின்பெருந்தாதைக்கு - உனது தந்தையாகியகோவலனுக்கு.

௧௨௭. முறைமையின் - நல்வழியாலே.

௧௨௯. எழுநாளென்றல், ஒருமரபு.

௧௩௦. புரிந்தோன் - முற்கூறிய முன்னோனாகிய கோவலன். சுகதற்கு - புத்தனுக்கு.

(பி - ம்.) ௧௧௫. 'விளக்கிய பான்மையின்' ௧௧௬. 'அமிர்தம்' ௧௧அ. 'வேந்தனிறைஞ்சலின்' ௧௨௨. 'சொரியு முன்னாளில்' ௧௨௯. 'எல்லையிரவலர்க்களித்து'

வானேங்கு சிமையத்து வாலொளிச் சயித்த
மீனோர்க் கெல்லா மிடர்கெட வியன்றது
கண்டுதொழு தேத்துங் காதலின் வந்தித்
தண்டாக் காட்சித் தவத்தோ ரருளிக்
கஉரு காவிரிப் பட்டினங் கடல்கொளு மென்றவத்
தூவுரை கேட்டுத் துணிந்திவ ணிருந்த
தின்னுங் கேளாய் நன்னெறி மாதே
தீவினை யுருப்பச் சென்றநின் றாதையுந்
தேவரிற் றோற்றிமுற் செய்தவப் பயத்தா
கஙo லாங்கத் தீவினை யின்னுந் துய்த்துப்
பூங்கொடி முன்னவன் போதியி னல்லறந்
தாங்கிய தவத்தாற் றான்றவந் தாங்கி
காதலி தன்னொடு கபிலையம் பதியி

---

கஉக. சிமையத்து - மலையின். வாலொளிச்சயித்தம் - வெள்ளிய ஒளியையுடைய ஆலயம்; சயித்தம் - சைத்தியமென்னும் வடமொழிச் சிதைவு.

கஉஉ. மேனோர்க்கு - இவ்வுலகத்தோர்க்கு; "மேனோர்மடிவில்" (சிலப். பதி: ருக; உ : கஎ); "மேனோர்க் குழைப்பாம் பதிகத்து ளியன்ற வாறே" சீவக. உகூ.

கஉச. தண்டாக் காட்சி - நீங்காத அறிவு.

கஉரு - சு. இத்தவத்தோரென்றது, ஆண்டுள்ள முனிவர்களை.

கஉசு. யான் இவ்விடமிருந்தது தூவுரை கேட்டமையாலேயேயென்க.

இதுகாறும், தான் துறந்ததற்கும் வஞ்சிநகரடைந்ததற்கும் ஆண்டே வதிவதற்குங் காரணங் கூறிய மாசாத்துவான், மேலே பெரியோர் தனக்குக்கூறிய செய்தி முதலியன கூறுவான்.

கஉஅ. சென்ற - கொலையுண்டிறந்த.

கஉகூ. முற்செய்தவப்பயத்தால் தேவரிற் றோற்றியென்க.

கஙo. ஆங்கத்தீவினை - முற்கூறிய தீவினையின் பயனை. துய்த்து - அனுபவித்து.

கஙக. பூங்கொடி, விளி. முன்னவன் - புத்தன்.

கஙங. காதலி - தன்மனைவி. கபிலையம்பதி - கபிலைநகர்; இது புத்தன் பிறந்த இடம்; கபிலவஸ்துவென்றுங் கூறப்படும்.

(பி - ம்.) கஉக - உ. 'வால்வளைச் சயித்தம், மேனோர்க் கெல்லாமடர் கெட' கஉங, 'காதலன்வந்து' கஉரு - சு. 'மென்ற, தூவுரைகேட்டுத் துணிந்தியானிருந்தேன்' கஉஅ. 'தீவினையிறப்ப' கஉகூ. 'தோற்றமுன்' கஙக. 'போதியர்கல்லறம்'

நாத னல்லறங் கேட்டுவீ டெய்துமென்
௧௪௫ றற்புதக் கிளவி யறிந்தோர் கூறச்
சொற்பய னுணர்ந்தேன் றோகை யானு
மந்நா ளாங்கவ னறநெறி கேட்குவ
னின்னது தன்மைநெடுநிலைக் கந்திற் றுன்னிய
துவதிக னுரையிற் றுணிந்தனை யன்றே
௧௫௰ தவநெறி யறவண னாற்றக் கேட்டன
னாங்கவன் றானுநின் னறத்திற் கேதுப்
பூங்கொடி கச்சி மாநக ராதலின்
மற்றம் மாநகர் மாதவன் பெயர்நாட்
பொற்றொடி தாயரு மப்பதிப் படர்ந்தன
௧௫௫ ரன்னைதை யன்றியு மணியிழை கேளாய்
பொன்னெயிற் காஞ்சி நாடுகவி னழிந்து
மன்னுயிர் மடிய மழைவளங் கரத்தலி
னந்நகர் மாதவர்க் கைய மிடுவோ

---

௧௪௪. நாதன் - புத்தன். எய்தும் - அடைவான்.

௧௪௫. கிளவி - சொல். ௧௪௬. பயன் - பிரயோசனம். தோகை, விளி.

௧௪௭. அவனறநெறி - புத்தனுபதேசிக்கும் அறவழிகளை.

௧௪௬ - ௭. யானும் அறநெறிகேட்குவன்.

௧௪௮. நின்னது தன்மை - உனது பிற்காலச் செய்தியை.

௧௪௮ - ௯. நினது தன்மையைத் துவதிகனுரையால் தெளிந்தா யன்றோ.

௧௫௰. (கந்திற்பாவையால் நீ அறிந்தாயென்பதை) அறவணவடிகள் சொல்லக்கேட்டேன்.

௧௫௧. அவன்றானும் - அறவணவடிகளும். ஏது - ஏதுநிகழ்ச்சிக் குரிய இடம்.

௧௫௨. பூங்கொடி, விளி.

௧௫௪. பொற்றொடி தாயரும் - உனது தாயராகிய மாதவியும் சுதமதி யும்.

௧௫௩ - ௪. பெயர்நாளில் தாயரும் உடன் சென்றார்.

௧௫௬. காஞ்சிநாடு - காஞ்சிநகரத்தையுடைய நாடு.

௧௫௭. மடிய - இறக்க. ௧௫௮. ஐயம் - பிச்சை.

௧௫௬ - ௭. மணி. உ௧: ௧௪௭ - ௮.

(பி - ம்.) ௧௪௫ - ௬. 'கழறச்சொற்பய' ௧௪௭. 'அறநெறிகடவேன்' [illegible]. 'துணிந்தனை தவநெறி' ௧௫௪. 'பொற்றொடித்தாயரும்' ௧௫௫. 'அன்னை தன்றியும்'

வலையா வுடம்பிற் றோன்றுவ மூன்றும்
பொய்யே குறளை கடுஞ்சொற் பயனில்
சொல்லெனச் சொல்லிற் றோன்றுவ நான்கும்
எ0 வெஃகல் வெகுளல் பொல்லாக் காட்சியென்
றுள்ளந் தன்னி னுருப்பன மூன்றுமெனப்
பத்து வகையாற் பயன்றெரி புலவ
ரித்திறம் படரார் படர்குவ ராயின்
விலங்கும் பேயு நரகரு மாகிக்
எரு கலங்கிய வுள்ளக் கவலையிற் றோன்றுவர்
நல்வினை யென்ப தியாதென வினவிற்
சொல்லிய பத்தின் றொகுதியி னீங்கிச்
சீலந் தாங்கித் தானந் தலைநின்று
மேலென வகுத்த வொருமூன்று திறத்துத்
அ0 தேவரும் மக்களும் பிரமரு மாகி
மேவிய மகிழ்ச்சி வினைப்பய னுண்குவ

---

சுஅ. கடுஞ்சொல் - வன்சொல்.

எ0. பொல்லாக்காட்சி-மயக்கம்; அஃதாவது, உண்மையையறியாமை.

சுச - எஉ. இவ்வடிகளிற் கூறியபத்துக்குற்றங்களையும் தசதோஷங்க ளென்பது பௌத்தநூல் வழக்கு.

எஎ. சொல்லியபத்து: "மருடரு மாம்வாய் மெய்யிற் கொலைமுதற் றீவினைபத் தாமே" (சித்தாந்தத்தொகை; நீல. புத்த. ௬ரு - சமய.) நீங்கலாவது, இப்பத்தினின்றும் நீங்கிக் கொல்லாமை முதலியபத்தினையும் பெறுதல்; 'பல்லுயிரோம்புதல் தவஞ்செய்தல் தானஞ்செய்தல் என்னும் காயத்தின்குணம் மூன்றும், மெய்யுரை, நல்வார்த்தை, இனியவைகூறல், பயன்படுஞ்சொற்கூறல் என்னும் வாயின்குணம் நான்கும், அருளினைவு, ஆசையறுத்தல், தவப்பற்று என்னும் மனத்தின் குணம் மூன்றும் ஆகிய நற்குணம் பத்து' என்று கூறுவாருமுளர்; சிவ - சித்தி. சௌத்திராந்திகன்மதம், ௩0 - உரை.

எஅ. பத்தின் வகைகளை இந்நூல் உக-ஆம் காதை, ருஎ-ஆம் அடிக் குறிப்பிற்காண்க.

அக. மகிழ்ச்சி வினைப்பயன் - இன்பம். மகிழ்ச்சிவினை - புண்ணியம்.

சுச - அக. இவ்வடிகளிற் கூறியதுபோலவே, "விலங்கு நரகரும் பேய்களு மாக்கும், நல்வினைத் [illegible] கழிமிசை கழித்தாற், றேவரு மக்களும்

(பி - ம்.) சுஅ - கூ. 'பயமில, சொல்லே சொல்லிற றோன்றுவ நான்கும்' எக - உ. 'மூன்றும் பத்துவகை' எச. 'இத்திறப் படரநர்' எஎ. 'தொகுதிநீங்கி'

ருணர்வெனப் படுவ துறங்குவோ ருணர்விற்
புரிவின் ருகிப் புலன்கொளா ததுவே
யருவுரு வென்பதவ் வுணர்வு சார்ந்த
௮௫ வுயிரு முடம்பு மாகு மென்ப
வாயி லாறு மாயுங் காலை
யுள்ள முறுவிக்க வுறுமிட னுகு
மூறெனா வுரைப்ப துள்ளமும் வாயிலும்
வேறு புலன்களை மேவுத லென்ப
௯௦ நுகர்வே யுணர்வு புலன்களை நுகர்தல்

---

பிரமரு மாகுதி, ராகவி லவ்வினை யயரா தோம்புமின்'' (மணி: ௨௧ - ௪)
என்று முன்பு வந்திருத்தல் காண்க.

௪௫ - ௮௧. மு. மணி. ௨௪ : ௧௦௫ - ௪௦.

௮௨. உணர்வு: இது பஞ்சஸ்கந்தத்திலொன்ருகவுங் கூறப்படும் ; உறங்குவோருணர்வின் - தூங்குவோருடைய உள்ளம் கர்த்ருத்வமும் போக்த்ருத்வமுமின்றி ஸாக்ஷிமாத்திரமாக நிற்றல்போல.

௮௩. புரிவு இன்ருகி - செய்யுந்தொழில் யாதொன்றுமின்றி ; புலன் கொளாதது - விஷயங்களை அநுபவியாது ஸாக்ஷிமாத்திரையாயிருத்தலை யுடையது.

௮௨ - ௩. உணர்வு, உள்ளம், விஞ்ஞானமென்பன ஒருபொருட்சொற்கள் ; இதுவே கருமத்தொகுதியொடுகூடிய வியவகாரதசையில் உயிரென்று வழங்கப்படுமென்பதும், முடிவில் ஆன்மாவென்று ஒன்று இல்லையென்பதும் பௌத்தர்கொள்கை ; (நீல. புத்த. ௩௩ - ௪. சமய) ஆன்மா இல்லையென்பதனுல் இவர்கள் அநான்மவாதிகளென்று கூறப்படுவர்; இந்த இரண்டடிகளாலும் உணர்விலக்கணம் கூறப்பட்டது.

௮௪ - ௫. இவ்விரண்டடிகளாலும் அருவுருவினிலக்கணம் கூறப்பட்டது.

௮௬. வாயில், துவாரம், வழி, ஆயதனம், இடமென்பன ஒருபொருட்சொற்கள்.

௮௭. உள்ளமுறுவிக்க - விஞ்ஞானத்தில் விஷயங்களையடைவித்தற்கு ; உறும் இடனுகும் - உற்ற இடங்களாகும் ; இடங்கள்: மெய் வாய் கண் மூக்குச் செவியென்னும் இந்திரியமைந்தும் மனமொன்றும்.

௮௬ - ௭. இவ்விரண்டடிகளாலும் வாயிலினிலக்கணம் கூறப்பட்டது.

௮௮. ஊறு - ஸ்பரிசம். ௮௯. புலன்களை - விஷயங்களை.

௮௮ - ௯. ஷடாயதனங்கள் விஷயங்களை ஸ்பரிசித்தல் ஊறெனப்படுமென்பர் ; இவ்விரண்டடிகளாலும் ஊற்றினிலக்கணம் கூறப்பட்டது.

௯௦. இதனுல் நுகர்வினிலக்கணம் கூறப்பட்டது.

(பி - ம்.) ௮௪ - ௫. 'மருவுணர்வென்பதவவுருவுசார்ந்துயிரு' ௮௬. 'வாயிலூறுமாயுங்' ௮௮. 'ஊறென்றுரைப்பது' ௮௯-௯௦. 'மேவுதலென்பது நுகர்வெனப்படுவதுணர்வு புலனுக்காதல'

வேட்கை விரும்பி நுகர்ச்சியா ராமை
பற்றெனப் படுவது பசைஇய வறிவே
பவமெனப் படுவது கரும வீட்டந்
தருமுறை யிதுவெனத் தாந்தாஞ் சார்தல்
௩௯௫ பிறப்பெனப் படுவதக் கருமப் பெற்றியி
னுறப்புண ருள்ளஞ் சார்பொடு கதிகளிற்
காரண காரிய வுருக்களிற் றோன்றல்
பிணியெனப் படுவது சார்பிற் பிறிதா
யியற்கையிற் றிரிந்துடம் பிடும்பை புரிதல்
௪௦௦ மூப்பென மொழிவ தந்தத் தளவுந்
தாக்குநிலை யாமையிற் றாங்களர்ந் திடுதல்

---

௩௯௧. வேட்கை - த்ருஷ்ணை ; ஆராமை - நிரம்பாமை ; "ஆரா வியற்கை யவா" (குறள். ௩௭௦.) நிரம்பாமையாவது - தாமேயமைந்து தம்பயனும் நிலையாமையின், வேண்டாதனவாகிய பொருள்களை வேண்டி மேன்மேல் வளர்தல் ; இதனால் வேட்கையதிலக்கணம் கூறப்பட்டது.

௩௯௨. பசைஇய - ஒட்டிக்கொண்ட ; இதனாற் பற்றினிலக்கணம் கூறப்பட்டது.

௩௯௩. ஈட்டம் - கூட்டம்; ஈண்டுக்கூறியதுபோலப் பவத்தைக் கருமத் தொகுதியென்று பின்னுங்கூறுவர்; ௩௧[illegible], ௧[illegible].

௩௯௩-௪. இந்த இரண்டடிகளாலும் பவத்தினிலக்கணம் கூறப்பட்டது.

௩௯௫. கருமப்பெற்றியின் - கருமங்களினியல்போடு.

௩௯௬. உறப்புணருள்ளம் - மிகப்புணர்ந்த விஞ்ஞானம் ; சார்பொடுகதிகளில் - சம்பந்தத்தோடு கூடிய பிறப்புவகைகளில்.

௩௯௭. இங்கே 'காரண காரிய வுருக்களிற் றோன்றல்' என்பதற்கேற்ப, "அன்புடை யாருயி ரரசற் கருளிய, வென்புடை யாக்கை" (௨௫ : ௧௭௦-௧) என்று முன்னுங் கூறியிருத்தல்காண்க.

௩௯௬ - ௭. உள்ளம் தோன்றலென்க.

௩௯௫ - ௭. இவ்வடிகளால் தோற்றத்தினிலக்கணம் கூறப்பட்டது.

௩௯௮. பிணி - வியாதி. பிறிதாய் - வேறாகி.

௩௯௯. இயற்கை - ஸ்வபாவம். திரிந்து - வேறுபட்டு. இடும்பை - துன்பம்.

௩௯௮ - ௯. இவ்வடிகளாற் பிணியினிலக்கணம் கூறப்பட்டது.

௪௦௦ - ௪௦௧. அந்தம் - மரணம். இவ்வடிகளால் மூப்பினிலக்கணங் கூறப்பட்டது.

(பி - ம்.) ௩௯௪. 'தருவதுமுறையென' ௩௯௬ - ௭. 'உறப்புளஞ்சார் பொடுகதிர்களிற் றோன்றல்' ௩௯௮. 'சார்பிற்பிறிதாய்' ௩௯௯. 'திரிந்துடம்பிடும்பையுறுதல்' ௪௦௦ - ௪௦௨. 'மூப்பெனப் படுவ...தளவுதாக்குதாங்கெளி வுறுதல் சாகாடென்ப'

சாக்கா டென்ப தருவுருத் தன்மை
யாக்கை வீழ்கதி ரெனமறைந் திடுதல்
பேதைமை சார்வாச் செய்கை யாகுஞ்
க௦௫ செய்கை சார்வா வுணர்ச்சி யாகு
முணர்ச்சி சார்வா வருவுரு வாகு
மருவுருச் சார்வா வாயி லாகும்
வாயில் சார்வா வூறா குமமே
யூறு சார்ந்து நுகர்ச்சி யாகு
க௧௦ நுகர்ச்சி சார்ந்து வேட்கை யாகும்
வேட்கை சார்ந்து பற்றா குமமே
பற்றிற் றோன்றுங் கருமத் தொகுதி
கருமத் தொகுதி காரண மாக
வருமே யேனை வழிமுறைத் தோற்றந்
க௧௫ தோற்றஞ் சார்பின் மூப்புப்பிணி சாக்கா
டவல மரற்றுக் கவலைகை யாறெனத்
தவலி றுன்பந் தலைவரு மென்ப
வூழின்மண் டிலமாச் சூழுமிந் நுகர்ச்சி
பேதைமை மீளச் செய்கை மீளுஞ்
க௨௦ செய்கை மீள வுணர்ச்சி மீளு
முணர்ச்சி மீள வருவுரு மீளு

---

க௦[illegible] - [illegible]. சாக்காடு-மரணம். அருவுருத்தன்மையினையுடையவுடம்பு [illegible]த்தயிக்குஞ் ஞாயிறுபோல மறைந்துபோதல்; இந்தவுவமையே இந்நூலின் முன்பும் (௨௪: ௧௦௧ - ௨) கூறப்பட்டிருத்தல் காண்க; இவ்வடிகளாற் சாக்காட்டினிலக்கணம் கூறப்பட்டது.

[illegible]அ - ௧௦௯. இவ்வடிகளாற் பிணி மூப்புச் சாக்காடென்னும் வினைப் பயன்களுக்கு இலக்கணங்கூறினர்.

௧௧௩. அவலமுதலியவற்றினிலக்கணங்களை இப்புத்தகத்தின் ருகூ - ஆம் பக்கத்திற்பார்க்க.

௧௧௫ - ௭. மூப்புமுதலியன துக்கமெனவுங் கூறப்படுமாதலின், அவைகள் 'தவலிறுன்பம்' எனப்பட்டன.

௧௧௮. ஊழ் இல் மண்டிலமா - முடிவில்லாத வட்டமாக; ஊழ் - முடிவு; "ஊழ்பா டின்றி" (௩௦; ௩௭) என்றார் முன்னும்; இந்நுகர்ச்சி [illegible]; ஊழின் - முறைமையினையுடைய எனினுமாம்.

௧௦௪ - ௧௮. இவ்வடிகளால் துக்கமும் துக்கோற்பத்தியுமாகிய வாய்மைகளிரண்டும் கூறப்பட்டனவென்பர்.

௧௧௯. மீள - நீங்க; இல்லையாகவென்றுமாம்.

(பி - ம்.) ௧௦௨. 'மறைந்தநிறுதல்' ௧௦௭. 'அருவுருசார்வா' ௧௧௩ - ௪. 'கானமாகி, வருமயாயானைவழி'

மருவுரு மீள வாயின் மீளும்
வாயின் மீள வூறு மீளு
மூறு மீள நுகர்ச்சி மீளு
௧௨௫ நுகர்ச்சி மீள வேட்கை மீளும்
வேட்கை மீளப் பற்று மீளும்
பற்று மீளக் கருமத் தொகுதி
மீளுங் கருமத் தொகுதி மீளத்
தோற்ற மீளுந் தோற்ற மீளப்
௧௩௦ பிறப்பு மீளும் பிறப்புப் பிணிமூப்புச்
சாக்கா டவல மரற்றுக் கவலை
கையா றென்றிக் கடையி லுன்ப
மெல்லா மீளுமிவ் வகையான் மீட்சி
யாதிக் கண்ட மாகு மென்ப
௧௩௫ பேதைமை செய்கை யென்றிவை யிரண்டுங்
காரண வகைய வாத லானே
யிரண்டாங் கண்ட மாகு மென்ப
வுணர்ச்சி யருவுரு வாயி லூறே
நுகர்ச்சி யென்று நோக்கப் படுவன
௧௪௦ முன்னவற் றியல்பாற் றுன்னிய வாதலின்
மூன்றாங் கண்டம் வேட்கை பற்றுக்
கரும வீட்ட மெனக்கட் டுரைப்பவை
மற்றப் பெற்றி நுகர்ச்சி யொழுக்கினுட்
குற்றமும் வினையு மாக லானே

---

௧௩௦. பிறப்பு - ஈண்டுப் புனர்ஜனனம்; இப்படியே பின்னும் வரும்.
௧௩௩. மீட்சி இவ்வகையினையுடைத்து.

௧௧௯ - ௩௩. இவ்வடிகளால் துக்கநிவாரணமாகிய மூன்றாவது வாய்மை கூறப்பட்டதென்பர்.

இனி, நான்குகண்டங்களும் முறையே கூறப்படும்.

௧௩௪ - ௬. பேதைமையும் செய்கையுமாகிய இரண்டும் காரணங்களாக வுள்ளனவாதலின், இவை முதற்கண்டமென்று கூறப்படும்.

௧௩௭ - ௪௦. உணர்ச்சி முதலிய ஐந்தும், பேதைமை செய்கையென்னு மிரண்டாலும் வந்தனவாதலின், இவை இரண்டாங்கண்டமென்று கூறப்படும்.

௧௪௧ - ௪. வேட்கை முதலிய மூன்றும் மேற்கூறிய நுகர்ச்சியொழுக்

(பி - ம்.) ௧௪௧ - ௨. 'பற்று, கருமவீடம்' ௧௪௪. 'பற்று நுகர்ச்சி'

௧௪௫ நான்காங் கண்டம் பிறப்பே பிணியே
மூப்பே சாவென மொழிந்திடுந் துன்ப
மெனவிவை பிறப்பி லுழக்குபய னாதலிற்
பிறப்பின் முதலுணர் வாதிச் சந்தி
நுகர்ச்சி யொழுக்கொடு விழைவின் கூட்டம்
௧௫௦ புகர்ச்சியின் றறிவ திரண்டாஞ் சந்தி
கன்மக் கூட்டத் தொடுவரு பிறப்பிடை
முன்னிச் செல்வது மூன்றாஞ் சந்தி
மூன்றுவகைப் பிறப்பு மொழியுங் காலை
யான்றபிற மார்க்கத் தாய வுணர்வே
௧௫௫ தோன்றல் வீடெனத் துணிந்து தோன்றியு
முணர்வுள் ளடங்க வுருவாய்த் தோன்றியு
முணர்வு முருவு முடங்கத் தோன்றிப்
புணர்தரு மக்க டெய்வம்விலங் காகையுங்
கால மூன்றுங் கருதுங் காலை
௧௬௦ யிறந்த கால மென்னல் வேண்டு
மறந்த பேதைமை செய்கையா னவற்றை
நிகழ்ந்த காலமென நேரப் படுமே
யுணர்வே யருவுரு வாயி லூறே

கத்தின் கணுண்டாகிய குற்றமும் அதனுளதாகும் வினையுமாக இருத்த லின், இவை மூன்றுங்கண்டமென்று கூறப்படும்; வேட்கை முதலிய மூன்ற னுள் வேட்கையும் பற்றும் குற்றமெனவும் பவம் வினையெனவுங்கொள்க.

௧௪௫ - எ. பிறப்பும் பிணிமுதலிய கன்மபலனும் முற்கூறிய வினைப் பயனாக இருத்தலின், இவை நான்காங்கண்டமென்று கூறப்படும்.

௧௪௮. பிறப்பின் முதல் - செய்கை. செய்கையும் உணர்வுஞ் சேர்தல் முதற்சந்தியாகும்.

௧௪௯. கூட்டம் - சேருதல்.

௧௪௯-௫௦. நுகர்ச்சியும் வேட்கையுங்கூடுதல் இரண்டாஞ்சந்தியாகும்.

௧௫௧ - ௨. பவமும் தோற்றமுஞ் சேர்தல் மூன்றாஞ்சந்தியாகும்.

௧௬௦ - ௩. பேதைமையும் செய்கையுமாகிய இவை இறந்த

(பி - ம்.) ௧௪௬ - எ. 'துன்ப, மிவையிறபபிலுழக்குபபயனாதலின்' ௧௪௮ - ௫௦. 'உணர்வாதிபெ...வினையினிடை முதறசந்திநுகர்சசியினறிவ திரண்டா' ௧௫௧. 'கன்மக்கூததொடு' ௧௫௪. 'ஆயுவுணர்வே' ௧௫௬. 'உளடங் கியுமுணர்வாய்' ௧௫௭. 'உடங்கித் தோன்றி' ௧௬௨ - ௩. 'காலமென விசைக் கப்படுமே மூப்பேசாவேபிணியே யவல்மொறறுக'

நுகர்வே வேட்கை பற்றே பவமே
௧௬௫ தோற்ற மென்றிவை சொல்லுங் காலை
யெதிர்கா லம்மென விசைக்கப் படுமே
பிறப்பே பிணியே மூப்பே சாவே
யவல மரற்றுக் கவலைகை யாறுகள்
குலவிய குற்றமெனக் கூறப் படுமே
௧௭௦ யவாவே பற்றே பேதைமை யென்றிவை
புனையுமடை பவமும் வினைசெய லாகு
முணர்ச்சி யருவுரு வாயி லூறே
நுகர்ச்சி பிறப்பு மூப்புப்பிணி சாவிவை
நிகழ்ச்சிப்பய னுங்கே நேருங் காலைக்
௧௭௫ குற்றமும் வினையும் பயனுந் துன்பம்
பெற்ற தோற்றப் பெற்றிக ணிலையா
வெப்பொரு ளுக்கு மான்மா விலையென
விப்படி யுணரு மிவைவீட் டியல்பா
முணர்வே யருவுரு வாயி லூறே
௧௮௦ நுகர்வே பிறப்பே பிணிமூப்புச் சாவே
யவல மரற்றுக் கவலைகை யாறென
நுவலப் படுவன நோயா கும்மே
யந்நோய் தனக்குப்

---

காலத்தனவென்றும், உணர்வுமுதல்தோற்றமீறாகியவை நிகழ்காலத்தனவென் றும், தோற்றமுதற் கையாறீறாகியாசவுள்ளவை எதிர்காலத்தனவென்றுங் கூறப்படும்.

௧௬௬ - ௭௦. அவாவும் பற்றும் பேதைமையுமாகிய இம்மூன்றும் குற்ற மென்று கூறப்படும்.

௧௭௧. பவமும் செய்கையும் வினையாகும்.

௧௭௨ - ௪. உணர்ச்சி முதலியவாறும் மூப்புப் பிணி சாக்காடென்னும் வினைப்பயனென்றும் ஆகிய ஏழும் பயனுகக்கூறப்படும்.

௧௭௬. தோன்றிய இயல்பையுடைய பொருள்கள் நிலையா.

௧௭௫ - ௮. இவ்வடிகள், முன்பு, "நிலையில வறிய துன்பமென நோக்க, வலையா வீட்டிற் குறுதி யாகி" (௩௦: ௩௦ - ௩௧) என்றதனை விளக்கி நின்றன.

௧௭௬ - ௮௮. உணர்வுமுதல் வினைப்பயனீறாகவுள்ளவேழும் துக்க

(பி - ம்.) ௧௭௫. 'துன்பமும்' ௧௭௮. 'உணருமென்பிவை' ௧௮௦ - ௮௧. 'பிறப்பே மூப்பேசாவேயவலவாற்றுகவலைகைகயாறென்ன'

பேதைமை செய்கை யவாவே பற்றுக்
௧௮௫ கரும வீட்டமிவை காரண மாகுந்
துன்பந் தோற்றம் பற்றே காரண
மின்பம் வீடே பற்றிலி காரண
மொன்றிய வுரையே வாய்மைநான் காவ
துருவு நுகர்ச்சி குறிப்பே பாவனை
௧௯௦ யுள்ள வறிவிவை யைங்கந்த மாவன

---

மென்று கூறப்படும்; அதற்குப் பேதைமைமுதலிய ஐந்தும் காரணமாகும்; ஆதலால் தோன்றுதல் துன்பம்; அதற்குக்காரணம் பற்று; வீடு இன்பம்; அதற்குக்காரணம் பற்றின்மையே; என்கிற நான்குரைகளும் நான்கு வாய்மைகளாகும்; "பிறந்தோ ருறுவது பெருகிய துன்பம், பிறவா ருறுவது பெரும்பே ரின்பம், பற்றின் வருவது முன்னது பின்னது, அற்றோ ருறுவது" (௨: ௬௪ - ௭) என்று முன்பும் வந்திருத்தல்காண்க. இவற்றை ஆர்ய சதுஷ்டயமென்பர் நீலகேசியுரையாசிரியர்; இந்நான்கினுள் துக்கநிவாரண மார்க்கம் எட்டுவகைப்படும்; அஃது அஷ்டாங்கமார்க்கமென்றும் விசுத்தி மார்க்கமென்றும் பழுதிலாவாழ்க்கையென்றுங் கூறப்படும். இவ்வெட்டாவன:—நற்காட்சி, நல்லூற்றம், நல்வாய்மை, நற்செய்கை, நல்வாழ்க்கை, நன்முயற்சி, நற்கடைப்பிடி, நல்லுளத்தோர்தலெப்பாடென்பன; "பழித்திடாப் பழுதில் வாழ்க்கை யெட்டையும் பாரித்து" (சிவ - சித்தி. பரபக்கம், சௌத்திராந்திகன்மதம், ௩); "நற்காட்சி நல்லொழுக்க நல்வாய்மை நல் வாழ்க்கை, நற்செய்கை யோடைந்து நாடு", "நன்முயற்சி நன்கான் கடைப் பிடிநல் லோர்தம்பாற், செல்கையுட னெட்டனைத்துந் தேறு" (பாமத திமிரபானு) என வருவனவற்றாலறிக. இவ்வெட்டும் ஸம்மியக் திருஷ்டி, ஸம்மியக்ஸங்கற்பம், ஸம்மியக் வாக்கு, ஸம்மியக்கருமம், ஸம்மியகாஜீவம், ஸம்மியக்வியாயாமம், ஸம்மியக்ஸ்மிருதி, ஸம்மியக் ஸமாதியென்றபெயர் பெறுமென்றும், இவைகளே ஜனனமரண துக்கத்தை மாற்றுதற்குரியவழி யென்றும் அசுவகோஷபோதிஸத்துவரால் வடமொழியிற் செய்யப்பட்டுள்ள புத்தசரித்திரத்தின் ௧௫-ஆம் வர்க்கத்தால் தெரிகின்றன.

௧௮௯. நுகர்ச்சி - வேதனை. ௧௯௦. உள்ளவறிவு - விஞ்ஞானம்.

௧௮௯ - ௯௦. உருவம், வேதனை, குறிப்பு, பாவனை, விஞ்ஞானமென்னும் இவ்வைந்தும் பஞ்சஸ்கந்தமெனப்படும்; (சிவ-சித்தி. பரபக்கம், சௌத்திராந்திகன்மதம், ௬.) அவற்றுள் உருவக்கந்தம், பூதவுரு உபாதாயவுருவென இருவகைப்படும். பூதவுரு-பிருதுவி, அப்பு, தேயு, வாயு என்னும் நான்குமாம்; உபாதாயவுரு-வலி, இரதம், வன்னம், கந்தமென்னு நான்குமாம். வேதனை - குசலவேதனை (சுகவுறிவு), அகுசலவேதனை (துக்கவறிவு), குசலாகுசலவேதனை (சுகதுக்கவறிவு) என்னுமூன்றுமாம். குறிப்பு - மெய் வாய் கண் மூக்குச் செவியென்னுமைந்தும் மனமொன்றும் ஆகிய ஆறுமாம். பாவனையாவது - மனோவாக்குக்காயங்களினுண்டாகும் நல்வினைபத்தும் தீவினைபத்தும் ஆகிய இருபதுமாம். "எட்டிவை யுருவ மூன்று வேதனை யாறு ஞான,

(பி - ம்.) ௧௮௫. 'காரணமாகும்' ௧௮௯. 'குறிப்பினே, யுள்ளமறிவிவை'

அறுவகை வழக்கு மறுவின்று கிளப்பிற்
றொகையே தொடர்ச்சி தன்மை மிகுத்துரை
யியைந்துரை யென்ற நான்கினு மியைந்த
வுண்மை வழக்கு மின்மை வழக்கு
கக௫ முள்ளது சார்ந்த வுண்மை வழக்கு
மில்லது சார்ந்த வின்மை வழக்கு
முள்ளது சார்ந்த வின்மை வழக்கு
மில்லது சார்ந்த வுண்மை வழக்குமெனச்
சொல்லிய தொகைத்திற முடம்புநீர் நாடு

---

மொட்டிய குறிப்போ டாறு செய்கையு மிருப தாகக், கட்டிய பஞ்ச கந்தங் கணத்திலிற் பங்க மாகும், தொட்டோற் பத்து மூன்றுஞ் சுகதனாற் றுணிவு தாமே'' (சிவ-சித்தி. பரபக்கம், சௌத்திராந்திகன்மதம், ௧௦. ௨-ம்) என்று வருதல் காண்க; இன்னும் இவற்றினிலக்கணங்களை, "ஐங்குருவம் வேதனை யுயாக்குறிப்புப் பாவனைமெய், தாங்குணர்வென் றைந்தாங் கந்தம்'' எ-ம், "உருவமுடல் பூத முபாதாய மென்னு, மிருவிதத்தி னுமெழு மெய்'' எ-ம், "வேதனை துன்பிம் பிவற்றின் விரவுமென், றோதவொரு மூன்று மென்றோர்'' எ-ம், "பொறிவிதமோ டைந்தும் பொறியைப் பொருந்தி, யறியுமன முங்குறிப்பென் றாய்'' எ-ம், "வாக்குமன மாக்கையிவை பாவனை யென்றேமதியா, யாக்குமிவை தாமறம்பா வம்'' எ-ம், "இந்நால் வகையினுமேய்ந் தையமற வெண்ணுமெனம், விஞ்ஞான மென்றே விளம்பு'' எ-ம், "இந்தவித மைந்துஞ்சந் தானத் தெழுந்தழிகை, பந்தமென வேநீதான் பார்'' எ-ம், "அறக்கெடுத லேபரம முத்தியிவை யைந்து, மறக்கெடுமா றுங்கூறு வாம்'' எ-ம் வரும் திருவாக்காலு (பாமரதிமிரபானு) மறிந்துகொள்க. இதைப் பஞ்சஸ்கந்தக்கூட்டமே உயிரென்பர்; அது, "கலையொப் பனைகை விரலைந் துகளு, மிவையிப் படிகைப் பிடியென் றறுபோ, லவையப் படிகட் டங்களுந் துகளு, மவையைப் படுகல் லுயிரா மெனவும்'' (நீல. புத்த. ௧௦) என்னும் பாட்டால் நன்குணர்த்தப்படுகின்றது. இவ்வைந்தினுள்ளே குறிப்பினைக் குறியென்றும், அது வடமொழியில் ஸம்ஜ்ஞாஸ்கந்தமென்று பெயர் பெறுமென்றுங் கூறுவாரும், இரண்டொன்றிற்கு வேறு இலக்கணங்கூறுவாருமுளர்.

கக௩ - அ. அறுவகைவழக்காவன:—தொகை, தொடர்ச்சி, தன்மை மிகுத்துரை, இயைந்துரையென்றநான்கொடுஞ்சேர்ந்த உண்மைவழக்கு முதலிய ஆறுமாம். இயைந்துரையைத் தொகையிலடக்கி மூன்றென்பாருமுளர்.

ககச. தொகைத்திறமாவது: உடம்பும் நீரும் நாடுமென்க; என்றது, பலதாதுக்களின்கூட்டம் உடம்பென்றும் பலதுளிகளின்கூட்டம் நீரென்றும் பலவூர்களின்கூட்டம் நாடென்றும் வழங்கப்படுமாறுபோலப் பஞ்சஸ்கந்தங்களின் கூட்டமே ஆன்மாவென்று வழங்கப்படுவது தொகையென்ற

(பி - ம்.) கக௫ - அ. 'சார்ந்தவுண்மைவழக்கு, மில்லதுசார்ந்தவின்மை....சார்ந்தவின்மை வழக்கும்'

௨௦௦ தொடர்ச்சி வித்து மூளைதா னென்றிந்
நிகழ்ச்சியி லவற்றை நெல்லென வழங்குத
லியல்பு மிகுத்துரை யீறுடைத் தென்றுந்
தோன்றிற் றென்று மூத்த தென்று
மூன்றி னொன்றி னியல்புமிகுத் துரைத்த
௨௦௫ லியைந்துரை யென்ப தெழுத்துப் பலகூடச்
சொல்லெனத் தோற்றும் பலநாட் கூடிய
வெல்லையைத் திங்க ளென்று வழங்குத

---

வாறு ; இனி இத்தொகையினை உண்மைவழக்கு இன்மைவழக்கு என்பவற்றோடுசேர்த்து 'சுவரும்மாமும் ஆக்கையும் கற்றையுங்கூடின சமுதாயத்தை வீடென்று வழங்குமாறுபோலவும் பலவூருங்கூடின சமுதாயத்தை நாடென்றும்பற்றென்றும்வழங்குமாறுபோலவும்பஞ்சஸ்கந்தக்கூட்டத்தை ஆன்மாவென்று வழங்குவது கற்பனாநாமமெனக்கொள்க' என்றும், 'மரம் கற்லறமுதலியவற்றைப்பிரித்தால் வீடில்லையானாற்போலவும் ஊர்களைப்பிரித்தாற் பற்றம் நாடுமில்லையானாற்போலவும் ஐந்துஸ்கந்தங்களையும் பிரித்துணருங்கால் ஆன்மா இல்லையாமெனக்கொள்க' (சிவ-சித்தி. பரபக்கம், உ௯௯)என்றும் விளங்க அவற்றிற்குஉதாரணங்காட்டினருமுளர்; "ஒருவனென் றேதப்பட்டா னுருவாதி யைந்துங் கூடி, வருபவ னென்று ரைத்த றொகையுண்மை வழக்க தாகு, முருவமங் காதி யாய வைந்தையு மொருவ னின்று, தருவது தொகையி னின்மை வழக்கதாஞ் சாற்றுங் காலே" சிவ - சித்தி. பரபக்கம், சௌத்திராந்திகன்மதம், எ.

௨௦௦ - ௨௦௧. தொடர்ச்சியாவது-வித்திலிருந்து முளையும் முளையிலிருந்து தாளுந்தோன்றி நிகழ்ந்து நெல்லென்று வழங்குமாறுபோல எல்லாம் காரணகாரிய சம்பந்தயாகவுள்ளதென்பது; "காரண காரி யத்தின் றொடர்ச்சியாய்க் கால மூன்றின், சோர்வறத் தோன்றுங் கெட்டு வழியென்கை தொடர்ச்சி யுண்மை, யோர்தரி னொருவ னேயெக் காலத்து முள்ளா னென்று,தேர்வது தொடர்ச்சி யின்மை வழக்கதாஞ் செப்புங் காலே" (சிவ-சித்தி. பரபக்கம், சௌத்திராந்திகன்மதம், அ)என்று இத்தொடர்ச்சியை உண்மை வழக்கு இன்மைவழக் கென்பவற்றோடுசார்த்தி அவற்றிற்கு இலக்கணங்கூறியிருத்தல் காண்க.

௨௦௨ - ௩. இயல்பு மிகுத்துரை-தன்மைமிகுத்துரை. தன்மைமிகுத்துரையாவது - ஒருபொருளினுடைய இறப்புப்பிறப்பு மூப்பு என்பவற்றுள் ஒன்றனியல்பை மிகுத்துச் சொல்லுதல். இதனை உண்மைவழக்கு இன்மை வழக்கென்பனவற்றோடுசார்த்தி, "தோற்றிய பொருள்கா ளெல்லா நாசமா மென்று சொல்லு, மாற்றமுன் னுரைத்தன் மற்றை மிகுத்துரை வழக்கி னுண்மை, போற்றிய பொருள்கண் கட்குப் போனது போன்மு னிந்து, வேற்றுமைப் பட்ட தென்கை மிகுத்துரை யில்வழக்கே" (சிவ - சித்தி. பரபக்கம், சௌத்திராந்திகன்மதம், கூ) என்று முறையே அவற்றிற்கு இலக்கணங் கூறியிருத்தல் காண்க.

௨௦௫ - எ. தொகைக்கும் இயைந்துரைக்கும் வேற்றுமையாதோவெ

(பி - ம்.) ௨௦௧. 'நிகழ்ச்சியிலவற்றை'

ளுள்வழக் குணர்வில் வழக்கு முயற்கோ
டுள்ளது சார்ந்த வுள்வழக் காகுஞ்
உசo சித்தத் துடனே யொத்த நுகர்ச்சி
யுள்ளது சார்ந்த வில்வழக் காகுஞ்
சித்தமுற் பவித்தது மின்போ லென்கை
யில்லது சார்ந்த வுண்மைவழக் காகுங்
காரண மின்றிக் காரிய நேர்த
உசரு வில்லது சார்ந்த வில்வழக் காகு
முயற்கோ டின்மையிற் றேற்றமு மில்லென
னான்கு நயமெனத் தோன்றப் படுவன
வொற்றுமை வேற்றுமை புரிவின்மை யியல்பென்க

---

னின் பலபொருள்களின் வரையறைப் படாததொகுதி தொகையாமென்றும் பலபொருள்களின் வரையறைப்பட்ட தொகுதி இயைந்துரையாமென்றுங் கூறுவர்.

கஙஅ - உ௦எ. இவ்வடிகளால் தொகை முதலிய நான்கிலிலக்கணங் களும் கூறப்பட்டன.

உ௦அ - கசூ. இவ்வடிகளால் உண்மைவழக்கு, இன்மைவழக்கு, உள்ளதுசார்ந்தவுண்மைவழக்கு, உள்ளதுசார்ந்தவின்மைவழக்கு, இல்லது சார்ந்தவுண்மைவழக்கு, இல்லதுசார்ந்தவின்மைவழக்கென்னும் ஆறிலிலக் கணங்களும் முறையே கூறப்பட்டன; "அறுவகை வழக்கு மறிபட வுணர்ந்து" என்பது போத்தநூல்; இவ்வறுவகைவழக்கின் பெயரும் அவற்றி னிலக்கணங்களும் ஈண்டுக்கூறப்பட்டிருத்தல்போலப் பின்வரும் திருவிருத் தங்களிலுங் கூறப்பட்டிருத்தல் காண்க; "உள்வழக் கில்வழக்குள்ளது சார்ந்த வுள்வழக்கோ, டுள்ளது சார்ந்த வின்மை வழக்குட னின்மை சார்ந்த,வுள்வழக் கின்மை சார்ந்த வில்வழக் கென்றே யாறு,முள்வழக் குளதுஞ் சென்கை முயற்கோடின் றில்வ ழக்கே", "உணர்வு சார்ந் துணர்வு, தித்தை யுள்ளது சார்ந்த வுண்மை, யுணர்வுபி னின்று மென்கை யுள்ளது சார்ந்த வின்மை, யுணர்வு முன்பின்றித் தோன்ற லில்லது சார்ந்த வுண்மை, யுணரினில் லதுசா ரின்மை யுள்ளங்கை யுரோம மாமே" (சிவ - சித்தி. பரபக்கம், சௌத்திராந்திகன்மதம், க௦, கக.)

உசஎ - அ. ஒற்றுமைநயம் வேற்றுமைநயம் புரிவின்மைநயம் இயல்பு நயமென நயங்கள் நான்கு வகைப்படும்.

(பி - ம்.) உ௦கூ - க௦. 'வழக்கேற்குமசித்தத்துடனேயொத்த நுகர்ச்சி' உசஉ - அ. 'முற்பவித்துமினனான்குநயமெனத்தோன்றப்படுவ தொற்றுமை' உசஅ - கூ. 'இயலபெனக்'

காரண காரிய மாகிய பொருள்களை
௨௨௦ யொன்று வுணர்த லொற்றுமை நயமாம்
வீற்றுவீற் றாக வேதனை கொள்வது
வேற்றுமை நயமென வேண்டல் வேண்டும்
பொன்றக் கெடாஅப் பொருள்வழிப் பொருள்களுக்
கொன்றிய காரண முதவுகா ரியத்தைக்
௨௨௫ கருதற் குள்ளந் தானிலை யென்றல்
புரிவின்மை நயமெனப் புகறல் வேண்டு
நெல்வித் தகத்து ளென்முளை தோற்றுமென
வல்ல வியல்புநய மிவற்றினுங் கொள்பயன்
றொக்க பொருளல தொன்றில்லை யென்று
௨௩௦ மப்பொரு ளிடைப்பற் றாகா தென்றுஞ்

---

௨௧௯ - ௨௦. இவ்வடிகளால் ஒற்றுமைநயத்தினிலக்கணங் கூறப்பட்டது.

௨௨௧. வேறுவேறாக அறிதல்.

௨௨௧ - ௨. இவ்வடிகளால் வேற்றுமைநயத்தினிலக்கணங் கூறப்பட்டது.

௨௨௩. பொன்றக்கெடாப்பொருள் - முற்றக்கெடாதபொருள். வழிப்பொருள் - காரியப்பொருள்.

௨௨௫. உள்ளம் - விஞ்ஞானம். ௨௨௬. புரிவின்மை-செய்தலில்லாமை.

௨௨௫ - ௬. "உணர்வெனப் படுவ துறங்குவோ ருணர்விற், புரிவின் றாகிப் புலன்கொளா ததுவே" (௩௦: ௪௨ - ௩) என்றார் முன்னும்; விஞ்ஞானத்திலடங்கியிருக்கும்கன்மமே மறுபிறப்பிற்குக்காரணமென்பர்.

௨௨௩ - ௬. இந்த நான்கடிகளாலும் புரிவின்மை நயத்தினிலக்கணம் கூறப்பட்டது.

௨௨௭ - ௮. இவ்வடிகளால் இயல்புநயத்தினிலக்கணம் கூறப்பட்டது.

௨௨௮. இவற்றின் நாம்கொள்பயன் - இந்த ஒற்றுமைநயமுதலிய நயங்கள் நான்காலும் நாம் கொள்ளும்பயன் யாவையெனின்.

௨௨௯. தொக்கபொருளலது - சேர்ந்தபொருள்களையல்லாமல். ஒன்று - வேறாகிய ஒன்று.

இவ்வடியாற் கூறப்பட்டது ஒற்றுமைநயத்தாற்போந்த பயனென்க.

௨௩௦. இவ்வடியாற் கூறப்பட்டது வேற்றுமைநயத்தாற்போந்த பயனென்க.

(பி - ம்.) ௨௨௦. 'ஒர்விலதுயொனறு' ௨௨௦ - ௨௧. 'நயம் வீற்றுவீற் றுதலெவதனை கொள்வது' ௨௨௩. 'பொனாசகெடா...' ௨௨௬ - ௭. 'புகலல் வேண்டுமெனமுளைவீனாறு மெவல்லவியல்பு' ௨௨௮ - ௯. 'பயனுக கொள பயன, ஒருழுக்கபொருளதொனறில்லை'

செய்வா னெடுகோட் பாடிலே யென்று
மெய்துகா ரணத்தாங் காரிய மென்று
மதுவு மன்றத லாதது மன்றென்றும்
விதிமுறை தொகையிஞல் விரிந்த நான்கும்
௨௩௫ வினவிடை நான்குள
துணிந்து சொல்லல் கூறிட்டு மொழிதல்
வினவின் விடுத்தல் வாய்வா ளாமையெனத்
தோன்றியது கெடுமோ கெடாதோ வென்ருற்
கேடுண் டென்ற றுணிந்துசொல லாகுஞ்
௨௪0 செத்தான் பிறப்பா னேபிற வானே
வென்று செப்பிற்
பற்றிறந் தானே வன்மக னேவெனன்
மிகக்கூ றிட்டு மொழிதலென விளம்புவர்

---

௨௩௧. செய்வான் - கருத்தா. இவ்வடி யாற்கூறப்பட்டது புரிவின்மையத்தாற் போந்த பயனென்க.

௨௩௨ - ௩. இவ்வடிகளாற் கூறப்பட்ட இரண்டும் இயல்புவயத்தாற் போந்த பயன்களெனக்கொள்க; இங்ஙனங்கொள்ளாமல் இந்த இரண்டு பயனையும் பிரித்து முன்னதை முன்னதனேடுகூட்டினும் பொருந்தும்.

௨௩௪. விரிந்த, முற்று. நான்கும் விரிந்தனவென்க. நான்கும் - நான்கு பயன்களும்.

௨௩௫. வினக்களுக்குரிய விடைகளென்க.

௨௩௬. கூறிட்டுமொழிதல் - பகுத்துச்சொல்லல்.

௨௩௭. வாய்வாளாமை - பேசாதிருத்தல்; ஆசிரியர் நச்சினர்க்கினியர், "அறுவகைப் பட்ட பார்ப்பனப் பக்கமும்" (தொல். புறத். ௨0) என்னுஞ் சூத்திரத்தில், 'நாலிரு வழக்கிற் றபதப் பக்கமும்' என்பதனுரையில், தவஞ்செய்வோர்க்குஉரியனவாகஎடுத்துக்காட்டிய 'ஊணசையின்மை, நீர்நசையின்மை, வெப்பம்பொறுத்தல், தட்பம்பொறுத்தல், இடம்வரையறுத்தல், ஆசனம்வரையறுத்தல், இடையிட்டுமொழிதல், வாய்வாளாமை' என்னும் எட்டினுள் இம்மொழிவந்திருத்தல் காண்க.

௨௩௫ - ௭. துணிந்துசொல்லல், கூறிட்டுமொழிதல், வினவின்விடுத்தல், வாய்வாளாமையென நான்குவிடைகளுள்ளன.

௨௩௮ - ௯. தோன்றியது - உண்டான பொருள். தோன்றியபொருள் கெடுமென்பது ஒருதலையாதலின், கெடுமென்றுணிந்து சொல்லலாயிற்று; துணிந்துசொல்லலென்னும் விடையினியல்பு கூறப்பட்டது.

௨௪0-௪௩. கூறிட்டுமொழிதலென்னும் விடையினியல்பு கூறப்பட்டது.

(பி - ம்.) ௨௩௧. 'தெடாபாடிலே யெனறும்' ௨௩௨ - ௩. 'காரணத் தாங்காரியமென் றுமதுவு மன்றதாதது மன்றெ' ௨௩௪ - ௫. 'முறைதொகைவினவிடைநான்குன்' ௨௩௮. 'உண் டென்றித்துணிந்து'

விணவின் விடுத்தன் முட்டைமுன் திறனே
௨௪௫ பனைமுன் திறனே வெனக்கட் டுரைசெ
யென்று லெம்முட்டைக் கெப்பனை யென்றல்
வாய்வா ளாமை யாகா யப்பூப்
பழைதோ புதிதோ வென்று புகல்வா
னுரைக்கு மாற்ற முரையா திருத்தல்
௨௫௦ கட்டும் வீடு மதன்கா ரணத்த
தொட்டித் தருதற் குரியோ ரில்லை
யாமே யுரைத்த பொருள்கட் கெல்லாங்
காமம் வெகுளி மயக்கங் காரண

---

௨௪௪-௫. இந்தவடிகளால் விணவின் விடுத்தலென்னும் விடையினியல்பு கூறப்பட்டது.

௨௪௮. பழைது - பழையது.

௨௪௭-௯. இந்தவடிகளால் வாய்வாளாமையெனனும் விடையின் தியல்பு கூறப்பட்டது.

௨௪௫-௪௯. இவ்வடிகளிற் கூறிய விடைவகை நான்கும் தொல்காப்பிய உரையிற் கூறப்பட்டுள்ளன; கிளவி. ௬. ௧௩.

௨௫௦. கட்டு - பந்தம். 'அதன் காரணத்தது' என்பதனைக்கட்டினோடும் வீட்டினோடும் தனித்தனியே கூட்டுக.

௨௫௩. காமமுதலிய மூன்றும் முக்குற்றமெனப்படும்.

௨௫௨ - . மேற்கூறியபொருள்களெல்லாவற்றிற்கும் காமம் வெகுளி மயக்கமென்னும் இம்மூன்றுங் காரணமாகும்; "காமம் வெகுளி மயக்க மிவைமூன்ற, னாமங் கெடக்கெடு நோய்" (குறள். ௩௬௦) என்று வந்திருத்தல்காண்க.

இனி, எல்லாவற்றிற்கும்காரணமாகியகாமவெகுளிமயக்கங்களை முறையேநீக்குதற்குரிய பாவனைகள் கூறுவார்.

மைத்திரீபாவனை கருணாபாவனை முதிதபாவனை அசுபபாவனை உபேக்ஷாபாவனையெனப் பாவனை ஐந்துவகைப்படும்; அவற்றுள்,

௧. **மைத்திரீபாவனை**:— ஒருதுறவி வசதியான ஓரிடத்தையடைந்து தக்க ஆஸனத்திலிருந்த பின்பு பின்வருமாறு தியானித்தலாம்: 'உத்தமமான பிறப்பினையுடைய பிராணிகளெல்லாம் களிப்புற்றுவாழ்வனவாகுக; அவையெல்லாம் துக்கம் வியாதி துராசையென்னும் இவைகளினின்றும் விடுபட்டனவாகுக; எல்லாமனிதர்களும் எல்லாத்தேவர்களும் நரகவாதையினூற் பீடிக்கப்படுகிறயாவரும் ஸந்தோஷமுடையவர்களாக ஆகுக; அவர்கள் துக்கம் வியாதி துராசையென்னும் இவற்றினின்றும் விடு

(பி - ம்.) ௨௪௪. 'விணவின்விடுத்தல விரிக்குங்காலை முட்டை' ௨௪௫-௬. 'கட்டுரையென்றல்' ௨௪௮-௯. 'புகல்வானுக்கு' ௨௫௨. 'பொருள்களெல்லாம்'

மகித்தந் துக்க மகான்மா வசுசியெனத்

---

பட்டவர்களாக ஆகுக.' மைத்ரம் ஸ்நேகம் அன்பு என்பன ஒருபொருட் சொற்கள்; மைத்திரமென்பது குரோதத்திற்கு மாறானது; அவ்விரண்டும் ஒரிடத்துநிகழா; மைத்திரமென்பது த்ருஷ்ணையென்னுமாசையன்று; அவித்தை அல்லது மோகங்காரணமாக த்ருஷ்ணை பிறக்கும்; அதனால் ஆசை பிறக்கும். மைத்திரமென்னும் ஸ்நேகத்திலிருந்து அவாசையுண்டாகாது. ஒருவனுக்குத் தன்றுணைவன்விஷயமாக உண்டாகுமன்புதான் மைத்திரமென்பது.

௨. **கருணாபாவனை:**—'வறியவர்கள் வறுமை நீங்கிச் செல்வமுடையவர்களாக ஆகுக' என்றுபாவித்தல். கருணையாவது இரக்கமுள்ளஎண்ணம். அஃது, ஒருபிராணி துன்பமுறுவதைக்காணின், மனக்கலக்கத்தையும் அத்துன்பத்தை நிவர்த்தி பண்ணவேண்டுமென்பதையும் ஒருவருக்கு உண்டாக்கும்.

௩. **முதிதபாவனை:**—'ஆக்கமுடையவர்களுடைய நல்ல அதிர்ஷ்டமானது எப்பொழுதும் நீங்காதிருத்தல் வேண்டும்; ஒவ்வொருவரும் தத்தமக்கு அமைந்துள்ள நல்வினைப்பயனை அடைக' என்று பாவித்தல். முதிதையென்பதற்குச் சந்தோஷமென்பது பொருள்; ஆனால் அஃது உவகைப்பொருள்களையுடைமையால் உண்டாகுங்களிப்பன்று; இது மைத்திரி, கருணையென்னும் இரண்டுபாவனைகளுக்கும் சம்பந்தமானது. முற்கூறிய மூன்றுவகைப்பாவனைகளுள் ஏதாவதொன்றை அப்பியசிக்குந்துறவி, தான் கருதிய பாவனையை முதலில் சிலநண்பர்களிடத்தும் அப்பால் ஒருதெருவில் வாழ்பவர்களிடத்தும் அப்பால் ஒரூரரிடத்தும் அப்பால் ஒரு தேயத்தாரிடத்தும் முறையே செலுத்திப் பயிலுதல்நலம்.

௪. **அசுபபாவனை:**—அசுபமென்பதற்குப்பொருள் அமங்கலம்; நல்லதிர்ஷ்டமென்பதன் எதிர்மொழியாயிருப்பதோடு மகிழ்ச்சியின்மை வெறுப்பு என்பனவற்றையுண்டாக்குவதாகவுமுள்ளது. இதைப்பயிலும் ஒரு துறவி, சரீரமானது முப்பத்திரண்டு குற்றத்தாலாக்கப்பட்டதென்றும் சாணியின்குவியலில் தோன்றிவளரும் புழுக்கள்போலக் கருப்பப்பையில் உண்டானதென்றும் மலங்கழிக்குமிடத்தைப்போல அசுத்தத்தின் கொள்கலனாயிருப்பதென்றும் அருவருப்பான கசிவு அதிலுள்ள நவத்துவாரங்களின் வழியே ஓயாமற் பெருகுகின்றதென்றும் மலதாரையைப்போல வெறுத்தற்குரிய நாற்றத்தை அது வெளிப்படுத்துகின்றதென்றும் பாவித்தல். 'சரீரத்தின் காலவளவை ஒரு நிமிஷமே; மின்னலையும் நுரையையும் நீர்ப்போகட்டையும் காய்ந்த புல்லிற்பற்றிய நெருப்பையும் கடலின் அலையையும் ஆகாயத்திற் சஞ்சரிக்கிற மேகங்களையும் புல்நுனியிற்பட்ட பனித்துளியையும் போலப் பிறந்தபோதே அநாசமாம்' என்று சரீரத்தின் நிலையின்மையைப் பாவித்தலும் அசுபபாவனையின்பாற்படும்.

௫. **உபேக்ஷாபாவனை:**—எல்லாவுயிர்களையும் சமமாகப் பாவித்தலும் விருப்புவெறுப்பின்றி யிருத்தலுமாம். இது, மற்ற நான்குபாவனைகளைக் காட்டிலும் மிகவுயர்ந்தது; அருகத்துக்களால் அனுட்டிக்கப்படுவது; இது சமசித்தத்துவமென்றுங் கூறப்படும்.

(பி - ம்.) [illegible] - ௪. 'காரண, மலித்தந்துக்கமாதபாசுசியென'

௨௫௫ தனித்துப் பார்த்துப் பற்றறுத் திடுதல்
மைத்திரி கருணை முதிதையென் றறிந்து
திருந்துநல் லுணர்வாற் செற்றமற் றிடுக
சுருதி சிந்தனை பாவனை தரிசனை
கருதி யுய்த்து மயக்கங் கடிக

---

மைத்திரி, கருணை, முதிதம், உபேக்ஷையென்னும் நான்கு பாவனைகளும் உயர்வுபற்றிப் பிரம்மவிகாரபாவனையென்று கூறப்படும்; இவைமஹாப் பிரஹ்மாக்களால் அனுஷ்டிக்கப்படுவன.

௨௫௫. பார்த்து - அசுபபாவனை பண்ணி. பற்று - காமம்.

௨௫௫-௬. அசுபபாவனையாற்காமத்தையொழிக்கவென்றவாறு. உடம்பினை அநித்தியம் துக்கம் அநான்மா அசுசியென்றுபாவித்தல் அசுபபாவனையெனப்படுவதன்றி ஸ்ரீலக்ஷணபாவனையென்றுங் கூறப்படும். இதனைச் சிவஞானசித்தியார், பரபக்கம், சௌத்திராந்திகன்மதம், ௨-ஆம் திருவிருத்தத்துரையிற்காண்க; இவ்வசுபபாவனை, "நன்கென நாறுமி தென்றிவ் வுடம்பு நயக்கின்ற தாயி, னென்பது வாயில்க டோறு முண்ணின் றழுக்குச் சொரியத், தின்பதோர் நாயு மிழுப்பத் திசைதொறுஞ் சிப்பிலுக்கு போழ்தி, னின்ப நன்றூற்ற மிதன்க ணெவ்வகை யார்கொள லாமே" எ-ம், "உறுப்புக்கடா முடன் கூடி யொன்றா யியைந்த பெரும்பை, மறைப்பில் விழைவிற்குச் சார்வாய் மக்குவை தேலின் வுறுப்புக், குறைத்தன போல வழுகிக் குறைந்து குறைந்து சொரிய, வெறுப்பிற் கிடந்த பொழுதின் வேண்டப் படுவது முண்டோ" எ-ம், "எவ்வெனைச் சிந்தித்த லான்மற் றிவ்வுடம் பின்பத்துக் காமேற், றினைபெய்த புன்கத்தைப் போலச் சிறியவு மூத்தவு மாகி, வனையப் புழுக்குந் தமாவி காணவும் வாழவும் பட்ட, வினைய வுடம்பினைப் பாவி யானென தென்னலு மாமோ" எனவும் வருங் குண்டலகேசிச் செய்யுட்களாலு முணர்த்தப்பட்டது; "வினையின் வந்தது வினைக்கு விளைவாயது,......... யிக்கோ யிதனைப் புறமறிப் பாராய்" (௪: ௱௧௩-௨௧), "என்புந் தடியு முதிரமும் யாக்கையென்.........காய்ந்தபசி யெருவை கவர்ந்துண் ணுதையும்' (௬: ௧௦௭ - ௧௭) என இந்நூலுள்ளே வந்தன அசுபபாவனையின்பாற்படும்.

௨௫௬-௭. மைத்திரீபாவனைமுதலியமூன்றாலும் கோபத்தைப் போக்குக.

௨௫௮. சுருதி - ஞானநூற்பொருளைக் கேட்டல். சிந்தனை - சிந்தனை (சிந்தித்தல்.) பாவனை-பாவனை (பாவித்தல்); இதுதெளிதலென்றுங்கூறப்படும். தரிசனை - அறிதல்; மேற்கூறிய பாவனையைந்தனுள் ஈண்டுக்கூறிய சுருதிமுதலியன உபேக்ஷாபாவனையின் பாற்படும்.

௨௫௯. உய்த்து - ஆராய்ந்து.

௨௫௮-௯. உபேக்ஷாபாவனையால் மயக்கத்தைப்போக்குக வென்றவாறு.

(பி - ம்) ௨௫௫. 'தம்மிற்பார்த்.' ௨௫௬-அ. 'மயிரிறத்ரி...திதையு பெகைகியென்றிருதருறற செறறமறறிடுக சருபசிந்தனைபாவனை' ௨௫அ-௯. 'பாவனைதெசசனைகருதியுய்தலுமயககு'

௨௬௦ யிந்நால் வகையான் மனத்திரு ளிங்கென்று
முன்பின் மலையா மங்கல மொழியின்
ஞான தீப நன்கனங் காட்டத்
தவத்திறம் பூண்டு தருமங் கேட்டுப்
பவத்திற மறுகெனப் பாவைநோற் றனளென்.

௩௦. பவத்திறமறுகெனப்பாவைநோற்றகாதை முற்றிற்று.

---

௨௬௦. இந்நால்வகையென்றது, மேற்கூறியசுருதிமுதலியநான்கினையும். மனத்திருள்-மயக்கம்; 'இந்நால் வகையான் மனத்திரு ளிங்கு'என்றது அநுவாதம்.

௨௬௧. முன்பின்மலையா - பூர்வோத்தரவிரோதமில்லாத; மணி. ௨௭: ௯௦௦; ௩௦ : ௬.

௨௬௧ - ௨. மொழியினுற் காட்டவென்க.

௨௬௪. பவத்திறம் - பிறப்பின்வகைகள். பாவை - மணிமேகலை.

௧ - ௨௬௪. உணர்ந்தோள் வணங்கிச் சென்று அடைந்தபின் மொழிவோன் காட்டப் பாவைகேட்டுப் பூண்டு நோற்றனளென்க.

(பி - ம்.) ௨௬௦ - ௨. இருளிங்கனமொழியின் தீபமைகனக'

மணிமேகலை முற்றுப்பெற்றது.



## மணிமேகலைப்பாட்டு

# முதற்குறிப்பு அகராதி.

# மணிமேகலைப் பிரயோகவிளக்கம்

பழையநூல்களின் உரைகளில் உரையாசிரியர்களால் மணிமேகலையிலிருந்து உதாரணங்களாக எடுத்துக்காட்டப்பட்ட மூலங்களுள் இதுவரையில் கிடைத்தவை வருமாறு:—

## இலக்கணவிளக்கவுரை.

சூத்திர வெண். மணிமேகலை.

எக "எட்டி குமர னிருந்தோன் றன்னை" ... ச: ருஅ.

" "எட்டிப்பூ" ... உ௨: ககரு.

உசச "மாமறை மாக்கள் வருகுலங் கேண்மோ" ... கரு: கூரு.

" "முதுமறை யந்தணிர் முன்னிய துரைமோ" ... கரு: ருசு.

## சிலப்பதிகாரம்

### அடியார்க்குநல்லாருரை.

பக்கம். உரைப்பாயிரம்.

அ. "நாடகக் காப்பிய நன்னூ னுனிப்போர்" ... ககூ: அ௦.

கூ. "நாடகக் காப்பியம்" ... "

பதிகம்.

ககூ. "இறம்பூது சான்ற" ... உ௦: ருரு.

ச.—அந்திமாலைச் சிறப்புச்செய்காதை.

க௨கூ. "எற்கெடுத் திரங்கி" ... ரு: ருசு.

ரு.—இந்திரவிழவூரெடுத்தகாதை.

கசு௦. "வசித்தொழி லுதவ மாதிரங் கொழுப்ப" ... கச: ருஎ.

சு.—கடலாடுகாதை.

ககூச. "சுரியற் றூடி......பேடுகாண் குநரும்" ... ரு: கககு-உரு.

கூ.—கனாத்திறமுரைத்தகாதை.

உரு௦. "கரந்துரு வெய்திய கடவு ளாளரும்" ... க: கரு.

" "தேவருமக்களும்...நாளினும்" ... க: சுசு-எ.

க௦.—நாடுகாண்காதை.

உசுகூ. "நாலேழ் நாளினும்" ... க: [illegible].

உஎக. "இலவந் திகை......யாங்குளர்" ... ரு: சரு-சு.

கசு.—கொலைக்களக்காதை.

ச௨கூ. "நினக்கிவன் மகளா.........காரிகை" ... உக: உகூ-ரு?.

கஎ.—ஆய்ச்சியர்குரவை.

சருச. "முத்தை முதல்வி யடிபிழைத் தாயென" ... ககூ: கரு.

ககூ.—ஊர்சூழ்வரி.

[illegible]. "[illegible]" ... [illegible]: [illegible].

## சிவஞானசித்தியார் பரபக்கம்,
### திருவொற்றியூர் ஞானப்பிரகாசருரை.

| செய்யுள் எண். | சௌத்திராந்திகன்மதம். | மணிமேகலை. |
|---|---|---|
| ௩ | "பேதைமை செய்கை...நரகிருப்பர்" | உச: ௧0௫ - ௧0.<br>௩0: ச௫ - ௬. |
| ௰ | "தீவினை யென்பது......பிரமரு மாகி" | உச: ௧உ௩ - ௩௬.<br>௩0: ௬௪ - அ0. |

---

### சீவகசிந்தாமணி, நச்சினார்க்கினியருரை.

உ௧0எ "வேத்தியல்.........நங்கை" ... உ: ௧அ - ௩௧.

---

### திருக்குறள், பரிமேலழகருரை.

௫௪௩ "மாதவர் நோன்பு.........னின்றால்" ... உஉ: உ0அ - ௬.
௧0௪௩ "குடிப்பிறப் பழிக்கும் விழுப்பங் கொல்லும்" ... ௧௧: எ௬.

---

### தொல்காப்பியம், இளம்பூரணருரை.

சூத்திர வெண்.

(எழுத்ததிகாரம்.)

௧௫௪ "எட்டிப்பூ" ... ... ... ... உஉ: ௧௧௩.

### தொல்காப்பியம், நச்சினார்க்கினியருரை.

(எழுத்ததிகாரம்.)

௧௫௪ "எட்டிப்பூ" உஉ: ௧௧௩.
,, "எட்டி குமர னிருந்தோன் றன்னை" ... ச: ௫அ.

(சொல்லதிகாரம்.)

௫எ "ஐம்பெருங் குழுவு மெண்பே ராயமும்" ... ௧: ௧எ; உ௬: ௩அ.

(சொல்லதிகாரம், வேறுரை.)

[illegible] "கலைப்புற வல்குல் கழகு குடைந் தண்டு" ... ௬: ௧௧உ.
[illegible] "குருகு......மணிக்காஞ்சி" ... ௧அ: ௫௫ - ௬.

---

### நன்னூல், சங்கரநமச்சிவாயருரை.

௧௬௫ "எட்டிப்பூ" ... உஉ: ௧௧௩.
௧அச "சுருப்புநாண்" ... ௧அ: ௧0௫.
,, "கருப்புவில்" ... ௧அ: ௧0௫.
௩ச௧ "மாமறை மாக்கள் வருகுலங் கேண்மோ" ... ௧௩: ௬௩.
,, "முதுமறை யந்தணிர் முன்னிய துரைமோ" ... ௧௩: ௫௬.

### நன்னூல், மயிலைநாதருரை.

உ௩அ "வேணவா" ... பதி: ௧அ.

### நீலகேசி, சமயதிவாகரவாமனமுனிவருரை.

மொக்கல. ௧௬0. "இத்திறம்...தோன்றுவர்" உச: ௧௩உ - ச.
,, ,, "சீலந்தாங்கி...பிரமருமாகி" உச: ௧௩எ - ௬.

புத்தவாத. உஅ, கூ0. "நீவிரே...பிரமருமாகி" { உச : கஉரு - சகூ; ரு0 : சாசா - அ0.

மேற்கூறிய உரையாசிரியர்களுட் சிலரும் பிறரும் மணிமேகலையின் மூல வாக்கியங்களையே தமது உரைநடையாகவும் தழுவியெழுதிப் பாராட்டியிருக்கின்றனர்:—

## பரிமேலழகர்.

குறள், உ0 - ஆம் அதிகாரத்தின் அவதாரிகை - 'பொய், குறளை, கடுஞ்சொல், பயனில் சொல்லென வாக்கின்கண் நிகழும்பாவ நான்கனுள்': மணிமேகலை, உச: கஉஎ - அ, ரு0: சுஅ - கூ - "பொய்யே குறளை கடுஞ்சொல் பயனில், சொல்லெனச் சொல்லிற் றோற்றுவ நான்கும்."

உ0அ - ஆம் திருக்குறளின் விசேடவுரை - 'தன் காலம் வருந்துணையும் புலனாகாது உயிரைப்பற்றிநின்று அது வந்துழி உருப்பதாய தீவினை': மணிமேகலை, உகூ: ருஉ - "உம்மை வினைவந் துருத்த தொழியாது"

ருசாஉ - ஆம் திருக்குறளின் விசேடவுரை - 'பிறப்புப் பிணி மூப்பு இறப்புக்களாற் றுன்பமுற்று'; ரு0 - ஆம் திருக்குறளின் விசேடவுரை - 'பிறப்புப் பிணிமூப்பு இறப்புக்கள்': மணி. ரு0: அரு-க0 - "பிறப்பெனப் படுவதக் கருமப் பெற்றியி, னுறப்புண ருள்ளஞ் சார்பொடு கதிகளிற், காரண காரிய வுருக்களிற் றோன்றல், பிணியெனப் படுவது சார்பிற் பிறிதா, யியற்கையிற் றிரிந்துடம் பிடும்பை புரிதல், மூப்பென மொழிவதந்தத் தாவுந், தாக்குநிலை யாமையிற் றளர்ந் திடுதல், சாக்கா டென்பதருவுருத் தன்மை, யாக்கை வீழ்கதி ரெனமறைந் திடுதல்": மணி. ரு0: ககரு-அ - "தோற்றஞ் சார்பின் மூப்புப்பிணி சாக்கா, டவல மாற்றக் கவலைகை யாறெனத், தவலில் றுன்பந் தலைவரு மென்ப": மணி. ரு0: கஎ0-எஉ - "பிறப்பு நீளும் பிறப்புப்பிணி மூப்புச், சாக்கா டவல மாற்றக் கவலை, கையா றென்றிக் கடையில் றுன்பம்": மணி. ரு0: கசரு - கூ - "நான்சாங் கண்டம் பிறப்பே பிணியே, மூப்பே சாவென மொழிந்திடு துன்பம்": மணி. ரு0: ககூஎ-அ - "பிறப்பே பிணியே மூப்பே சாவே, யவல மாற்றுக் கவலைகை யாறுகள்"

## அடியார்க்குநல்லார்.

சிலப். க: உஎ. "தீது பிறர்நெஞ்சு புகுதல்": மணி. உஉ: சகூ. "பெண்டி ராயிற் பிறர் நெஞ்சுபுகார்"

சிலப். கரு: கூ - க0. "பசியும் பிணியும் பகையும்" மணி. க: எ0.

## தோல்காப்பிய வேறு உரையாசிரியர்.

தோல். சொல். கிளவி. ரு. கஉ. "செப்பு நான்குவகைப்படும்; துணிந்து கூறலாவது தோன்றியது கெடுமோ என்றவழிக் கெடுமென்றல்......... வாய்வாளாமையாவது ஆகாயப்பூ நன்றோ தீதோ என்றார்க்குரையாடாமை" மணி. ரு0: உஙரு - கூ.

ஷை ஷை சூ. கரு. "கும்மாயத்திற்குப்பயறு" மணி. உஎ: கஅரு.

## நச்சினார்க்கினியர்.

சீவக. கசாஉரு. "மணிமேகலையிற்கூறிய கலைகள்" மணி. உ: கஅ-ருக.

## மயிலைநாதர்.

நன். சூ. உககூ. "பயற்றதுகும்மாயம்" மணி. உஎ: கஅரு.

## மணிமேகலையில் வந்துள்ள

# வேறு கதைகள்.

---

### பதிகம்.

அடி எண்

க - அ. சம்புத்தீவத்தெய்வமாகிய சம்புவென்பவர், பூமிதேவிக்கு அரக்கரால் வரும் துயரத்தைப் போக்குதற்கு நாவல்மரத் தின்கீழேநின்று தவஞ்செய்தது.

கO - கஉ. காந்தனென்னுஞ் சோழனொருவனுடைய வேண்டுகோளால், அகத்தியமுனிவர், தமது கமண்டலத்திருந்த காவிரியைப் பெருகச்செய்தது.

[illegible] - உக. சம்பாபதி, புகார்நகரத்திற்குக் காவிரிப்பூம்பட்டினமென்று பெயரளித்தது.

### க—ஆவது காதை.

க - [illegible]. அகத்தியமுனிவர் கட்டளையின்படி, தூங்கெயிலெறிந்த தொடித் தோட் செம்பியனென்னுஞ் சோழனொருவன், காவிரிப்பூம் பட்டினத்தில் இந்திரனுக்கு விழாச்செய்தது.

### உ—ஆவது காதை.

சக - ருரு. கண்ணகி மதுரையம்பதியை அழித்தது.

### ௩—ஆவது காதை.

ரு[illegible] - ச. சூரியனுடையகிரணத்தாற் சிறையிழந்த சம்பாதி காவிரிப் பூம்பட்டினத்தைச்சார்ந்த ஒருவனத்தில் இருந்தமையால், அவ்வனம், சம்பாதிவனமென்று பெயர்பெற்றதென்பது.

ருரு - ௬. காவிரியின்தந்தையாகிய கவேரமுனிவர் இருந்தமையால்,காவிரிப் பூம்பட்டினத்தைச்சார்ந்த ஒருவனம், கவேரவனமென்று பெயர்பெற்றதென்பது.

க[illegible] - [illegible]. பிரத்தியும்மன் பேடிக்கோலம்பூண்டு வாணசுரனுடைய நகர வீதியிற்சென்று ஆடியது.

க[illegible] - எ. அருச்சுனன் பேடிவடிவங்கொண்டு விராடநகரஞ்சென்றது.

### ச—ஆவது காதை.

கOஎ - அ. கரிகாற்பெருவளத்தான் முதுமைவேடம்பூண்டு வழக்குத் தீர்த்தது.

### கக—ஆவது காதை.

[illegible] - ௬க. வறட்காலமொன்றில் உணவுகிடையாமையால் கௌசிகமுனி வர் நாயூனைக்கவர்ந்து தின்னத்தொடங்கியபொழுது இந்தி ரன்கட்டளையால் மழைபெய்ததென்பது.

### க௩—ஆவது காதை.

௬௩. அசலமுனிவர் பசுவின் புதல்வரென்பது.

[illegible]. சிருங்கிமுனிவர்சமீகமுனிவருக்குப் பசுவினிடம்பிறந்தவரென்பது.

௬ச. விரிஞ்சிமுனிவர் புலியின் புதல்வரென்பது.

௬ரு. கேசகம்பளரென்பவர் நரியின் புதல்வரென்பது.

கூ௨ - கூ. முனிவரிருவர் பிரமதேவருடையமுன்னிலையில் தெய்வகணிகை யொருத்தியால் தோன்றினரென்பது.

கரு—ஆவது காதை.

கூக - கூ. பிரச்சோதனனாற் சிறைவைக்கப்பட்ட உதயணனைச் சிறைநீட் டற்கு யூகியென்பவன் வேறுவடிவங்கொண்டு சென்றது.

கஎ—ஆவது காதை.

கூ - க௨. அணைகட்டுதற்பொருட்டு வானரங்கள் மலைகளைக்கொணர்ந்து கடலிற் போகட்டது.

கஅ—ஆவது காதை.

கூ0 - கூக. அகலிகையை விரும்பிய இந்திரன் கௌதமமுனிவருடைய சாபத்தால் ஆயிரங்கண்பெற்றது.

கூ௨ - கூ. அக்கினிதேவன் முனிவரெழுவர்களுடைய மனைவியரைவிரும்பி யதை அவன்மனைவி அறிந்து, அம்மங்கையர்வேடத்தைத் தனித்தனியே ஒவ்வொருகாலத்துப்பூண்டு, அவன்வேட்கை யைத்தணித்தது.

ககூ—ஆவது காதை.

ருக - உ. திருமால் வாமனவடிவங்கொண்டு மாவலிபாலிரந்து பின்பு பேருருவெடுத்து அடியிற் படியை அடக்கியது.

உ௨—ஆவது காதை.

உரு. பரசுராமர் அரசர்களுடைய பரம்பரையை வேரறுத்தது.

உக0. மனுவென்னுஞ் சோழராசன், தன்மகன்மேலே தேர்க்காலைச் செலுத்தி முறைசெய்தது.

உ௩—ஆவது காதை.

க0ரு - கக. காருகமடந்தையொருத்தியின் வரைவிலொழுக்கத்தால், அவ ளுடைய மகன் மரணமுற்றது.

கக௨ - அ. வேடனொருவன், அறிவில்லாமல், சூல்முதிர்ந்த மானொன்றை எய்து, அதன்வயிற்றினின்றும் நழுவிய குட்டியைக்கண்டு உயிர் நீத்தது.

உச—ஆவது காதை.

எ - ககூ. தேவகணிகையர் [illegible]ற்றுருபத்தொருவர் காவிரிப்பூம்பட்டினத் தில் மானிடக்கணிகையர்மரபில் முன்பு பிறந்தார்களென்று சித்திராபதி இராசமாதேவிக்குக் கூறியது.

உசா—ஆவது காதை.

கரு - ருக. கற்பின்மிக்க நீலியென்பவளுடைய சாபத்தால், கோவலன் கொலையுண்டிறந்தானென்பது.

எஎ - கூ0. சேரன்செங்குட்டுவன், கண்ணகியின் படிமஞ்சமைத்தற்கு வடநாட்டரசர்களை வென்று இமயமலையிலிருந்து கற்கொ ணர்ந்தது.

---

## புத்ததேவனுடைய பெயர்கள்:—

| | |
|---|---|
| சூ - சூடாமணிநிகண்டு. | பி - பிங்கலம். |
| தி - திவாகரம். | ம - மணிமேகலை. |
| நா - நாமலிங்காநுசாஸநம். | வே - வேறுநூல்கள். |

[இப்பெயர்களுள் ஒருபொருட் பல்பெயராய் வருவனவுமுள.]

அகளங்கமூர்த்தி, சூ.
அகளங்கன், தி.
அண்ணல், சூ. தி.
அத்வயவாதி, நா.
அநந்தலோசனன், தி.
அர்க்கபந்து, நா.
அரசுநிழலிருந்தோன், சூ.
அருங்கலைநாயகன், தி.
அருணெறிகாக்குஞ்செல்வன், தி.
அருளறம்பூண்டோன், ம.
அறத்தகைமுதல்வன், ம.
அறம்பகர்ந்தகோன், வே.
அறவாழியாள்வோன், ம.
அறவியங்கிழவோன், ம.
அறவோன், ம.
அறிவன், பி.
ஆதி, சூ. தி.
ஆதிதேவன், சூ.
ஆதிபுங்கவன், பி.
ஆதிமுதலவன், ம.
ஆதிமுனிவன், ம.
ஆரியன், ம.
இயல்குணன், ம.
உரகர்துயரமொழிப்போன், ம.
உலோகஜித், நா.
எண்ணில்கண்ணுடையோன், சூ.
எண்பிறக்கொழியவிருந்தோன், ம.
ஏகதேவன், தி. ம.
ஒருவன், ம.
கண்பிறர்க்களிக்குங்கண்ணோன், ம.
கந்தன், வே.
கலைகட்கெல்லாம்நாதன், சூ.
காமற்கடந்தோன், ம.
கௌதமன், நா.
சாக்கியமுனி, நா.
சாக்கியன், சூ.
சாக்கியஸிம்ஹன், நா.
சாந்தன், சூ. தி. பி.
சாஸ்தா, நா.
சினந்தவிர்ந்தோன், சூ.
சினன், சூ. தி. பி.
சினேந்திரன், ம.
செல்வன், சூ.
சைனன், சூ. தி.
சௌத்தோதனி, நா.
தசபலன், நா.
ததாகதன், சூ. நா.
தயாவீரன், ம.
தர்மராஜன், சூ. நா.
தருமதலைவன், ம.
தருமன், பி.
தன்னுயிர்க்கிரங்கான், ம.
தீநெறிக்கடும்பகைகடந்தோன், ம.
தீமொழிக்கடைத்தசெவியோன், ம.
துறக்கம்வேண்டாத்தொல்லோன், ம.
நரகர்துயர்கெடநடப்போன், ம.
நல்லறம்பகர்ந்தோன், வே.
நற்றவமூர்த்தி, தி.
நாதன், ம.
பகவன், சூ. தி. பி. ம.
பகவான், நா.
பஞ்சதாரைவிட்டவுணர்க்கூட்டிய பெருமான், சூ. தி.
பரதுக்கதுக்கன், வே.
பார், வே.
பார்மிசைநடந்தோன், பி.
பாரின்மிசையோன், தி.
பிடகன், பி.
பிணிப்பறுமாதவன், ம.
பிறர்க்கறமருளும்பெரியோன், ம.

பிறர்க்கறமுயலும்பெரியோன், ம.
பிறர்க்குரியாளன், ம.
பிறவிப்பிணிமருத்துவன், ம.
புங்கவன், தி.
புண்ணியமுதல்வன், சூ. தி.
புண்ணியமூர்த்தி, சூ. தி.
புத்தஞாயிறு, ம.
புத்தன், தி. நா.
புலவன், ம.
புனிதன், தி. பி.
பூமிசைநடந்தோன், சூ. நா.
பெரியவன், ம.
பெருந்தவமுனிவன், ம.
பெருமகன், ம.
பேரறிவாளன், ம.
பொதுவறிவிகழ்ந்து புலமுறுமாதவ[ன், ம.
போதித்தலைவன், ம.
போதிநாதன், ம.
போதிப்பகவன், ம.
போதிமாதவன், ம.
போதிமூலத்துநாதன், ம.
போதியுரவோன், ம.
போதிவேந்தன், தி. பி. வே.
பௌத்தன், வே.
மன்னுயிர்முதல்வன், ம.
மாயாதேவீசுதன், சூ. நா
மாரனைவென்றவீரன், ம.
மாரஜித், நா.
மிக்கோன், ம.
முக்குற்றங்கடிந்தோன், தி.
முக்குற்றமில்லோன், தி.
முத்தன், தி.
மூட்டறுமுணர்ந்தோன், ம.
முற்றவுணர்ந்தமுதல்வன், ம.
முன்னவன், ம.
முனி, நா.
முனீந்திரன், சூ. நா.
முனைவன், பி.
வரதன், வே.
வரன், சூ. தி. பி.
வாமன், சூ. தி. பி. ம.
வாய்மொழிசிறந்தநாவோன், ம.
விநாயகன், சூ. நா.
ஜினன், நா.
ஸ்ரீகனன், நா.
ஷடபிஜ்ஞன், நா.
ஸங்மார்க்கநாதன், வே.
ஸமந்தபத்ரன், நா.
ஸர்வஜ்ஞன், நா.
ஸர்வார்த்தஸித்தன், நா.
ஸித்தார்த்தன், வே.
ஸுகதன், நா. ம.

இன்னும் பலவுள.

———

புத்தர், பரதுக்க துக்கியாகிப் பிறர்க்கே உறுதிக்குழந்தாராயி னும், ஈசனுண்டென்றாவது ஆன்மாக்களுண்டென்றாவது யாதொ ன்றும் விளங்கக்கூறாமையாற் பெரியோர்கள், அவருடைய கொள் கைகளை எடுத்தெடுத்துக்கூறிப் பலவகையாக மறுத்து உரைப்பாரா யினர்; அம்மறுப்புக்களுட் சில வருமாறு :—

## திருஞானசம்பந்தமூர்த்திநாயனார்
### அருளிச்செய்த
# தேவாரங்கள்.

---

திருச்சிற்றம்பலம்.

கோயில்.

பட்டைத் துவராடைப் படிமங் கொண்டாடு
முட்டைக் கட்டுரை மொழிவ கேளாதே
சிட்டர் வாழ்தில்லைச் சிற்றம் பலமேய
நட்டப் பெருமானை நாளுந் தொழுவோமே.

வெற்றரையுழல்வார்துவராடையவேடத்தாரவர்கள்ளுரைகொள்ளன்மின்
மற்றவருலகின்னவலம்மவைமாற்றகில்லார்
கற்றவர்தொழுதேத்துசிற்றம்பலங்காதலாற்கழற்சேவடிகைதொழ
வுற்றவருலகின்னுறுதிகொளவல்லவரே.

திருநெல்வாயில்.

குண்ட மண்டுவர்க் கூறை மூடர்சொற்
பண்ட மாகவை யாத பண்பினர்
விண்ட யங்குநெல் வாயிலார் நஞ்சை
யுண்ட கண்டரெம் முச்சி யாரே.

திருக்கழிப்பாலை.

செய்ய நுண்டுவ ராடையி னாரொடு
மெய்யின் மாசு பிறக்கிய வீறிலாக்
கையர் கேண்மைய னேகழிப் பாலையெம்
மையன் சேவடி யேயடைந் துய்ம்மினே.

திருமகேந்திரப்பள்ளி.

உடைதுறந் தவர்களு முடைதுவ ருடையரும்
படுபழி யுடையவர் பகர்வன விடுமினீர்
மடைவளர் வயலணி மகேந்திரப் பள்ளியு
ளிடமுடை யீசனை யிணையடி பணிமினே.

திருவெண்காடு.

போதியர்கள் பிண்டியர்கண் மிண்டுமொழி பொருளென்னும்
பேதையர்க ளவர்ப்பிறிமி னறிவுடையீ ரிதுகேண்மின்
வேதியர்கள் விரும்பியசீர் வியன்றிருவெண் காட்டானென்
றோதியவர் யாதுமொரு தீதிலரென் றுணருமினே.

திருவையாறு.

குண்டாடு குற்றுடுக்கைச் சமணரொடு சாக்கியருங் குணமொன் றில்லா
மிண்டாடு மிண்டருரை கேளாதே யாளாமின் மேவித் தொண்டீர்
ரெண்டோளர் முக்கண்ண ரெம்மீச ரிறைவரினி தமருங் கோயில்
செண்டாடு புனற்பொன்னி செழுமணிகள் வந்தலைக்குந் திருவையாறே.

திருவாசகம்.

[திருத்தோணோக்கம்.]

புத்தன் முதலாய புல்லறிவிற் பல்சமயந்
தத்த மதங்களிற் றட்டுளுப்புப் பட்டுநிற்கச்
சித்தஞ் சிவமாக்கிச் செய்தனவே தவமாக்கு
மத்தன் கருணையினுற் றோணோக்க மாடாமோ.

திருச்சிற்றம்பலம்.

---

திவ்யப்பிரபந்தம்.

முதலாயிரம்—திருமாலை, எ.

புலையற மாகி நின்ற புத்தொடு சமண மெல்லாங்
கலையறக் கற்ற மாந்தர் காண்பரோ கேட்ப ரோதாம்
தலையறுப் புண்டுஞ் சாவேன் சத்தியங் காண்மி னையா
சிலையினு லிலங்கை செற்ற தேவனே தேவ னுவான்.

பெரியதிருமொழி—கக - ஆம் பதிகம், ரு.

பொங்குபோதியும்பிண்டியுமுடைப்புத்தர்நோன்பியர்பள்ளியுள்ளுறை
தங்கடேவருந்தாங்களுமேயாகவென்னெஞ்சமென்பாய்
எங்கும்வானவர்தானவர்நிறைந்தேத்தும்வேங்கடம்மேவிநின்றருள்
அங்கணுயகற்கின்றடிமைத்தொழில்பூண்டாயே.

---

# அரும்பதவுரையிலுள்ள உதாரணச்செய்யுளகராதி*.



* இந்நூல் அரும்பதவுரையில் மேற்கோளாக எடுத்துக்காட்டிய பிற நூற் செய்யுட்கள் அல்லது செய்யுட்பகுதிகளின் முதலைக் குறிப்பது.

# அரும்பத முதலியவற்றின் அகராதி.

[எண் - பக்களெண்.]

படி செய்தவர்; மணிமேகலைக்கு ஆபுத்திரன் வரலாற்றையும் அமுதசுரபியின் பெருமையையும் உணவளித்தலின் விசேடத்தையும் எடுத்துக்கூறிப் பலருடைய பசித்துன்பங்களையும் போக்கும்படி செய்ததன்றி அவளை வழிப்படுத்திய ஆசிரியரும் இவரே; வேதிலகையாலும் கந்திற்பாவைத் தெய்வத்தாலும் நிரம்பப் புகழப் பெற்றவர்; காவிரிப்பூம்பட்டினத்தைக் கடல்கொண்டபின்பு வஞ்சி நகரத்தை யடைந்து அவ்விடத்தே துறவுபூண்டிருந்த கோவலன் தந்தையோடு அளவளாவி அப்பாற் காஞ்சிநகரஞ்சென்று அங்கே தவம்புரிந்திருந்தார்; தம்மை வணங்குவோர்க்கு 'அறிவுண்டாக' என்றும், 'வாய்வதாக நின்மனப் பாட்டரம்' என்றும் இவர் ஆசிகூறியவாற்றால் எல்லோரும் எப்பொழுதும் ஞானமுடையராகவும் தருமமுடையராகவும் இருத்தல் வேண்டுமென்றெண்ணியிருந்தாரென்றும், "நரைமுதிர் யாக்கை நடுங்கா நாவி னுரைமூ தாளன்" என்றும், "நாத்தொலை வில்லா யாயினுந் தளர்ந்து மூத்தவிவ் யாக்கை வாழ்கபல் லாண்டு" என்றும் கூறப்பட்டிருத்தலால் இவர் மிக்க மூப்புற்றும் சிறிதும் சொல்வன்மை குன்றாதிருந்தாரென்றும் தெரிகிறது; இன்னும் 'பழுதறுமாதவன்' எ-ம், 'துணி பொருள் மாதவன்' எ-ம், 'நன்றறி மாதவன்' எ-ம், 'மறவண நீத்த மாசறு கேள்வி யறவணவடிகள்' எ-ம், 'அல்லவை கடிந்தவறவண வடிகள்' எ-ம், 'அறந்திகழ் நாவினறவணன்' எ-ம் இந்நூலில் ஆங்காங்குச் சிறப்பித்துக் கூறப்பட்டிருத்தலால் இவரது தூய்மை முதலியன இனிது விளங்கும்: 6, 25-6, 51, 113-4, 124, 132-5, 141, 152, 161, 165-6, 186, 232, 237-8, 250, 266, 270-71, 277, 289-90, 325-6, 334, 339, 344, 346, 349.

காரிருள், 162, 240, 260.
காருகமடந்தை, 261.
காருண்யம் - கருணையோடு செய்யும் தருமம்; இஃது அருளறம், நல்லறம், தயாதருமமென்றும் கூறப்படும்: 238, 284.
காரைக்காலம்மையார் - திருத்தொண்டர் அறுபத்து மூவருள் ஒருவர்; இவரியற்பெயர் புனிதவதியாரென்பது; இவருடையவூர் சோழநாட்டின் கண்ணதாகிய காரைக்கால்; இவரது அன்பின் மிகுதிகண்டு சிவபெருமான் 'அம்மையே' என்றழைத்தமையால் இவர் இப்பெயர்பெற்றார்; இவர் சரித்திரம் பெரியபுராணத்தால் நன்குவிளங்கும்; இவரருளிச்செய்தவைகள் மூத்ததிருப்பதிகம் இரண்டு, திருவிரட்டைமணிமாலை, அற்புதத்திருவந்தாதியென்பன; இவைகள் பதினொராந்திருமுறையிற் சேர்க்கப்பட்டுள்ளன: 73.
கால் - காற்று: 44, 49, 181, 307.
கால்கிளர்ந்து, 204.
கால்கோள் - கால்கொள்ளுதல்; அஃதாவது உத்ஸவாரம்பம்: 39.
கால்பரிய - அறுபட: 44.
கால்போகுபெருவழி, 47.
கால்விசைகடுக, 160.
காலக்கணிதம், 21.
காலக்கணிதர், 330.
காலத்திற்றோன்றியகொண்மூ, 153.
காலம், 129, 164.
காலமூன்று, 163, 371, 379.
காலவேகம் - ஒரு யானை: 45.
காலஸூத்திரம் - எட்டு நரகங்களுள் ஒன்று: 82.
காலாமஸுத்திரம் - அங்கோத்தரநிகாயமென்னும் நூலின் பகுப்புக்களுள்ஒன்று; இதிற்பிரத்தியக்ஷத்தினிலக்கணங் கூறப்பட்டுள்ளதென்பர்: 350. [196, 230.
காலை - காலம், 108, 138 - 9,
காலைஞாயிறு, 97, 104.

காவதம், 117, 149, 176, 295.
காவல், 195, 252, 261.
காவலன், 136, 151, 232, 252,
காவலாளர், 94. [261, 264, 284.
காவற்கணிகை, 242.
காவற்சோலை, 30, 31.
காவற்பெண்டிர் - செவிலித்தாயர்:
காவற்றெய்வதம், 19, 286. [89.
காவிதிப்பட்டம் - வேளாளரில் உழுவித்துண்போர் அரசனாற் பெறுவதொரு பட்டம்: 47.
காவிரி - ஒருநதி; காவேரியென்னும் வடமொழிச்சிதைவு; கவேரகன்னி, காவிரிப்பாவை, சோழர்குலக்கொடி தமிழ்ப்பாவை, நீர்ப்பாவை யெனவும் இது வழங்கப்படும்; இந்நதி கடலொடுகலக்கும் சங்கமத்துறையானது சிறந்த புண்ணிய தீர்த்தமென்று பல நூல்களாலுங் கொண்டாடப்படும்: 2 - 3, 31, 57, 165,
காவிரிநதியின் உற்பத்தி, 2. [242.
காவிரிப்பட்டினம், 338.
காவிரிப்படப்பை, 277.
காவிரிப்பாவை, 2, 31, 242.
காவிரிப்பூம்பட்டினத்துப்பிறந்தநூற்றிருபத்தொருபரத்தையர், 265.
காவிரிப்பூம்பட்டினத்தைக்கடல் கொள்ளச் சபித்தமை, 289.
காவிரிப்பூம்பட்டினம் - சோழர்களுடைய பழைய இராசதானி; இதில் இந்திரனால் நிருமிக்கப்பட்டுள்ள ஏழரங்குகளையுடைய ஒரு புத்தாலயமுண்டு; இந்நகரத்தின்பழைய பெயர் சம்பாபதியென்பது; இது காகந்தியென்றும் புகாரென்றுங் கூறப்படும்: 7, 12, 22, 29, 31-2, 64, 86, 105, 119, 183, 219, 241, 246, 269, 277, 287 - 8, 298, 332, 334, 349.
காவிரிவாயில் - காவிரிக்கரையில் திருமுகத்துறைகழியும் வாயில்; காவிரிப்பூம்பட்டினத்துள்ளது:
காவுந்தி, 332. [243.
காவேரி - ஒரு நதி; கவேரரென்பவ

கூ ச

# பிழையும் திருத்தமும்.

| பக்கம். | வரி. | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|
| ௨ | ௯ | திருத்த | திருந்த |
| ௩ | ௧௬ | மகாராஜீக | மகாராஜிக |
| ௪ | ௧௭ | மூதுரென்று | மூதூரென்று |
| ௧௧ | ௬ | புலர்புகழ் | பலர்புகழ் |
| ௨௨ | ௬ | மூதுரான்றவர் | மூதூரான்றவர் |
| ” | ௨௩ | இந்நுலுள்ளே | இந்நூலுள்ளே |
| ௩௧ | ௧௭ | சுடர்பூ | சுடர்ப்பூ |
| ௩௯ | ௯ | பேருர் | பேரூர் |
| ௪௨ | ௧௭ | அறியர்ப் | அறியாட் |
| ௫௬ | ௨௩ | சிறையெண்ப | சிறையென்ப |
| ௬௭ | ௨௦ | விசம்பி | விசும்பி |
| ௯௨ | ௨௧ | ௩ழு | ௩௫ |
|  | ௩௫ | முந்தை | முத்தை |
| ௧௦௯ | ௩௦ | இட | இடங் |
| ௧௨௫ | ௩௯ | மாணுவூரே” | மாணுவூரே ” |
| ௧௪௫ | ௧௯ | புலப்பி | புலம்பி |
| ௧௮௨ | ௧௨ | விஞ்சயன் | விஞ்சையன் |
| ௨௦௭ | ௧௫ | மகபாலி | மகாபலி |
| ௨௪௫ | ௩௧ | டுகாட்டின் | கோட்டின |
| ௩௧௧ | ௩௮ | ஆத்தநூலும் | ஆத்தனுநூலும் |
| ௩௧௩ | ௨௩ | றினமா | றினவா |
| ௩௫௯ | ௧௨ | சாதிக்கிர | சாதிக்கிற |
| ௩௬௭ | ௭ | மர்ம் | மாம; |
| ௪௩௨ | ௮ | எருத்தம், 316. | எருத்தம், 216. |
| ௪௯௦ | ௨௫ | பராந்தகன், 208. | பராந்தகன், 207. |